SHB2/NGB-81E

## ஒரு சேமிப்புக் கணக்கு வைத்துக்கொள்ள தீர்மானித்து எவ்வளவு காலம் ஆகிற

இன்னும் ஏன் தாமதிக்க வேண்டும்? நேஷனல் அண்ட் கிரிண்ட்லேஸ் பாங்கில் சேவிங்ஸ் பாங்கு கணக்கு ஆரம்பிப்பது மிகச் சுலபம். ஐந்தே ரூபாய்கள் இருந்த கணக்கு ஆரம்பித்து விடலாம். சேமிக்கும் ஆர்வம் ஒன்றுதான் தேவை.

சூழ்நிலை எப்பொழுதும் சுமுகமாகவே இருக்கிறது. பாங்கு சேவை எப்பொழுதும் உ கரமாக இருக்கும்.

எனவே உங்கள் அருகாமையிலுள்ள நேஷனல் அண்ட் கிரிண்ட்லேஸ் பாங்கின் கிளை விரைந்து செல்லுங்கள். எங்களிடம் உள்ள ஒரு சேவிங்ஸ் கணக்கு உங்களுக்கு ஆபத் உதவும் நண்பனாக எவ்வாறு விளங்குமென்பதைக் கண்டு கொள்ளுங்கள்!

உங்கள் சேமிப்பு எவ்வளவு குறைவாக இருந்தாலும் நேஷனல் அண்ட் கிரிண்ட்லேஸ் உங்களுக்கு அளிக்கும் கௌரவம் பெ



## நேஷனல் அண்ட் கிரிண்ட்லேஸ் பாங்க் லிமிடெ

(இங்கிலாந்தில் இணைக்கப்பட்டது. அங்கத்தினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்ட

கிளைகள்: சென்னை: 3. நார்த் பீச் ரோடு; 378. நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் ரோடு. (லாயிட்ஸ் கிளை); 6. அரமனைக்காரத் தெரு; 158. மவுண்ட் ரோடு.
தூத்துக்குடி: 44. பீச் ரோடு; ஹைதராபாத்: அபித் ரோட்

அஸோஸியேட்டட் பாங்குகள்: லாயிட்ஸ் பாங்கு லிமிடெட்-நேஷனல் புரோவின்ஷியல் பாங்க் லிமிடெட்

# கல்கி
## பொருளடக்கம்

விசுவாவசு வைகாசி 24 — ஜூன் 6

1 — ஏழைகளுக்கு... (தலையங்கம்)
4 — என்ன சேதி?
6 — ராஜாஜியின் கருத்துக்கள்
9 — காலச் சக்கரம்
18 — கந்தன் கருணை
25 — திரைப்பட விமர்சனங்கள்
26 — அவள் எங்கே?
30 — சாகஸ நிருபர்கள் சிலர்!
35 — விஷமக் கொடுக்குகள்
38 — ஜீவிதம்
49 — வெளியீட்டு விழா
56 — சூறாவளி
64 — இரு வரிசைக் கதைகள்
70 — சித்திரக் களஞ்சியம்
73 — அழையாத விருந்தாளி
80 — மங்களம் ஜோடி





செருப்புக்குச் சரியாகக் காலை வெட்டுவோம்
சர்க்கார்
பாரத நாடு








மலர் 24 ● இதழ் 45

# ஏழைகளுக்குச் சுதந்திரக் கட்சி சொல்லுவது:

காங்கிரஸ் கட்சி ஏழைகளின் நலனுக்கென்றே ஏற்பட்டது என்றும் சுதந்திரக் கட்சி பணக்காரர் நலனுக்கே ஏற்பட்டது என்றும் பொய்ப் பிரசாரம் செய்யப்பட்டு வருகிறது.

ஏழைகளுக்காகப் பரிதாபப்படுவதுபோல் பொய்ப் பேச்சு பேசுவதோ அல்லது உண்மையாகவே ஏழைகளுக்காகப் பரிதாபப்படுவது மட்டுமோ அவர்களுடைய முன்னேற்றத்துக்கு உதவாது. ஏழைகளின் வாழ்நிலையை உயர்த்துவது எப்படி என்று கண்டு, அந்த உபாயத்தைப் பின்பற்றும் கட்சிதான் ஏழைகளின் நலனுக்கு உகந்த கட்சி.

காங்கிரஸ் சோஷலிஸத்தின் கீழ் வியாபாரத்தில் ஒருசிலர் மட்டும் சர்க்காரின் சலுகையினால் பெர்மிட்—லைசென்ஸும் ஏகபோக்கியமும் பெற்று வருகின்றனர்; பல தொழில்கள் சர்க்காரால் எடுத்துக்கொள்ளப்பட்டு ஊதாரிச் செலவினங்கள் பெருகி ஏராளமான நஷ்டங்கள் ஏற்படுகின்றன; சர்க்காரின் அதிகாரத்தைப் பெருக்குவதற்காக வகுக்கப்பட்டுள்ள திட்டங்களுக்காக அரசாங்கத்தின் செலவு மேன்மேலும் உயர்ந்து வருவதால் மேன்மேலும் வரிகள் விதிக்கப்படுகின்றன;—ஏழைகள் வாங்கி உபயோகிக்கும் பண்டங்களின் விலைகளெல்லாம் உயர்ந்திருப்பதற்கு இவையே காரணம். போதாததற்குச் சர்க்காரின் பண வீக்க நிர்வாகத்தின் காரணமாக ஏழையின் கையிலுள்ள ரூபாயின் மதிப்பு நாள்தோறும் தேய்ந்து வருகிறது. வரிகளை ஏகத்தாறுக விதிப்பதால் தொழிலில் லாபம் காணவேண்டிய வியாபாரி விலைகளை உயர்த்தத்தான் நேரிடும். வரிகளைக் குறைக்காமலே விலைவாசிகளை உயர்த்தக் கூடாது என்று வியாபாரிகளை மிரட்டுவதும், அவர்களைப் பொதுஜன விரோதிகளாகச் சித்திரித்து நல்ல பெயர் வாங்குவதும் தான் இன்று காங்கிரஸின் தந்திரம். இந்த உண்மைகளைப் பகிரங்கப்படுத்துபவர்களைப் பணக்காரர் கட்சி என்று வருணிக்கிறார்கள்.

சோஷலிஸக் கொள்கையைக் காங்கிரஸ் 1954ல் தழுவியது. அதிலிருந்து இந்தப் பதினோரு ஆண்டுகளில் ஏழைகளின் வாழ்நிலை சிறிதும் உயரவில்லை. இன்னமும் வியாபாரிகள் மீதும், பதுக்கல்காரர்கள் மீதும் பழி போட்டுத் தப்பித்துக்கொள்ள முயல்வது நடக்காது. பதினோராண்டுகளில் நிலைமையைச் சீர்திருத்த முடியாமல், முன்னிலும் சீர்குலைத்து வரும் கட்சிக்கு ஆட்சியில் அமர்ந்திருக்கத் தகுதியில்லை. சோஷலிஸத்துக்குப் பதினோரு ஆண்டு அவகாசம் கொடுத்து விட்டோம். சோதனையில் அது தோற்று விட்டது. இனி மாற்று முறைக்கு வாய்ப்புத் தரவேண்டும்.

உற்பத்தி பெருகினால் மட்டுமே விலைகள் குறையும்; அப்போதுதான் வேலையின்மைப் பிரச்னை தீரும் என்பதை யாவரும் ஒப்புக் கொள்ள வேண்டும். உற்பத்தியைப் பெருக்குவதற்கு சோஷலிஸக் கண்ட்ரோல்களும் பலவந்தங்களும் உதவவில்லை என்பதைப் பதினோராண்டு பரீட்சையில் நிதரிசனமாகக் கண்டு விட்டோம். எனவே இனி சுதந்திர முறையில் தொழில் துறையினருக்கு ஊக்கமளித்துப் பார்க்க வேண்டியதே முறை. முத



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி — பாப்பா

— பாரதியார்

லாளிகள் நலனுக்காகத் தொழில் சுதந்திரம் கோரப்படவில்லை என்பதையும் மக்களனைவரின் நலனையும் மனத்தில் கொண்டே முதலீடு செய்பவர்களுக்குச் சுதந்திரம் கோரப்படுகிறது என்பதையும் ஏழை மக்கள் புரிந்துகொள்ள வேண்டும்.

அவசியமில்லாத டம்பாச்சாரி திட்டங்களை வெட்டியெறிந்துவிட்டு, மேல் நாட்டுடன் ராணுவ ஒப்பந்தம் கொண்டு நமது ராணுவச் செலவையும் குறைத்தோமாயின் சர்க்காரின் செலவு பெருமளவு குறையும். வரிகள் குறையும். விலைவாசிகள் இறங்கும். பெர்மிட் — லைசென்ஸ் சலுகைகளை ஒழித்தால் தொழில் துறையில் பெரும் அபிவிருத்தி காண்போம். நிலவரம்புகளை நீக்கினால் பெரிய பண்ணைகளில் நவீன சாதனங்கள் பயனாகி விளைச்சல் ஓங்கும். தங்களது உழைப்புத் திறனை நேர்மையுடன் அளித்து, நியாயமான ஊதியம் பெறவே ஏழைகள் வாய்ப்பை எதிர்நோக்கியிருக்கிறார்கள். நாடு முழுவதும் தனியார் தொழில் பரவலாக விருத்தி அடைந்தால்தான் இத்தகைய வாய்ப்புகள் ஏற்படுமேயன்றி, இந்தப் பெரும் உபகண்டத்தின் பொருளாதாரம் முழுவதையும் விஷயமறியாத சர்க்காரின் வசம் ஒப்புவித்து, மனித சக்தியைப் பயன்படுத்தாமல் இயந்திரச் சாதனங்களின் மூலம் பிரம்மாண்டத் திட்டங்களை நிறைவேற்றுவதால் ஏழைகளின் வேலை வாய்ப்பு ஒருகாலும் உயராது. இன்றைய மக்களை மட்டுமின்றி வருங்கால சந்ததியையும் அந்நியக் கடன்களுக்கு ஆளாக்கித் தலையெடுக்கவொட்டாமல் செய்யும் காங்கிரஸால் ஏழைகளுக்கு ஒருபோதும் நன்மை விளையப் போவதில்லை.

பிரத்தியட்ச உண்மை இதுவே எனினும், ஆளும் கட்சித் தலைவர்களின் சாதுரியத்தில் பாமர மக்கள் ஏமாந்து வருகிறார்கள். தேர்தல்களில் சர்க்கார் சர்வாதிகாரத்துக்கும் சுதந்திரப் பொருளாதாரத்துக்கும் போர் நடக்கவில்லை. பெரும் அதிகாரம் பெற்ற சர்க்காரின் செல்வாக்கு முழுவதையும் பெற்ற ஒரு கட்சியின் மாய வசீகரத்தின் முன்பு, வாக்காளருக்கு லஞ்சம் கொடுக்கவோ பொதுப் பணத்தின் மூலம் தொகுதிக்குக் காரியம் சாதித்துத் தரவோ வசதியற்ற கட்சி சத்தியத்தைக் கடைப்பிடித்துப் போராடுகிறது.

ஏழைகள் ஒரே ஒரு எளிய கேள்வியைக் கேட்டுப் பார்த்துக் கொண்டால் இந்தத் தாரதம்மியமான தேர்தல்களும் தரும ரீதியில் அமைந்துவிடும். 'பத்தாண்டுக்கு முன் நாம் இருந்ததைவிட இன்று நம் நிலைமை முன்னேறியிருக்கிறதா?' என்று ஏழை மக்கள் தங்களையே கேட்டுக் கொண்டால் போதும். பத்தாண்டுக்கு முன்னிருந்ததைவிட இன்று அவர்களின் ஊதியம் பெருகியிருக்கலாம். ஆனால் அதைக் கொண்டு வாங்கக்கூடிய பொருள்களின் அளவு எப்படித் தேய்ந்து விட்டது என்பதையும் கருத்தில் கொள்ள வேண்டும். இவ்வாறு செய்தால் சோஷலிஸத்துக்கு வேண்டிய காலம் அவகாசம் தந்தாகி விட்டது என்று கண்டு சுதந்திரக் கட்சியை ஆதரித்து வாக்குச் சீட்டில் முத்திரையைப் பதித்துப் பெட்டியில் போடுவார்கள். தேர்தல் சமயத்தில் கிடைக்கும் லஞ்சக்காசுக்கும் மயக்குப் பேச்சுக்கும் மசியாமல் மக்கள் நடந்துகொண்டால் தங்களின் வருங்கால வாழ்வு முழுவதற்கும் நல்வழி தேடிக் கொண்டவர் ஆவார்கள்.

# என்ன சேதி?

## இஸ்ரேல் கற்பிக்கும் பாடம்

மேற்கு ஜெர்மனி, யூதர்கள் நாடாகிய இஸ்ரேலை அங்கீகரித்து, ராஜதந்திரத் தொடர்புகள் ஏற்படுத்திக் கொண்டுவிட்டது. இதைப் போன்ற ஒரு புரட்சிகரமான நல்ல செய்தி சமீப கால சரித்திரத்தில் ஏற்பட்டதில்லை. ஹிட்லர் காலத்தில் யூதர்கள் இதுவரையில் உலகம் காணாத ராக்ஷஸக் கொடுமைக்கு ஆளாக்கப்பட்டார்கள். சொந்த நாடின்றித் தவித்த யூதர்களுக்கு ஒரு தாய்நாட்டை ஏற்படுத்தித் தரவேண்டுமென்றே இஸ்ரேல் நாட்டை அமெரிக்கா சிருஷ்டித்துக் கொடுத்தது. அரபு நாடுகள் இஸ்ரேலை ஒரு சுதந்திர நாடாக ஒப்புக்கொள்ள மறுத்தன. எகிப்துக்கும் இஸ்ரேலிடம் கடும் பகை. அராபியர்களுக்குரிய பிரதேசம் யூதர்களுக்கு வழங்கப்பட்டது என்ற குரோதம் நீண்ட நாட்களாகவே இருந்து வருகிறது. ஆகவே, எந்த நாடாகிலும் இஸ்ரேலுடன் நேச பாவம் கொண்டால் அதனிடம் எகிப்து விரோத பாவம் காட்டத் தொடங்கும். மேற்கு ஜெர்மனிக்கும் எகிப்துக்கும் பலவித நேச உறவுகள் உண்டு. சமீபத்தில் மேற்கு ஜெர்மனி இஸ்ரேலுடன் நேசங் கொள்ளப் போவதாக அறிவித்தபோது, எகிப்து அச்செய்கையை ஆட்சேபித்து ஜெர்மனியுடன் நேச உறவைத் துண்டித்துக் கொள்ளப் போவதாகவும் கம்யூனிஸ்ட் நாடாகிய கிழக்கு ஜெர்மனியுடன் நேச உறவுகள் கொள்ளப் போவதாகவும் அறிவித்தது. எகிப்தில் ஆயிரக்கணக்கான ஜெர்மானியர்கள் வசிக்கிறார்கள். எகிப்தின் மிரட்டலைக் கண்டு மே. ஜெர்மனி சற்றுப் பின் வாங்கியிருந்தால் அதை உலகம் நியாயம் என்றுகூடக் கருதியிருக்கும். ஆயினும், மேற்கு ஜெர்மனி இஸ்ரேலுடன் நேச உறவு கொண்டு விட்டது. எகிப்தும் இதுவரை தீவிர நடவடிக்கை எடுக்காமல் இருந்து வருகிறது. மே. ஜெர்மனியின் இந்த நடவடிக்கையை உலகமே பாராட்டுகிறது.

அதைவிட உண்மையான பாராட்டுக்கு உரிய விஷயம், இஸ்ரேல், ஜெர்மனியின் பழைய கொடுமைகளை மறந்து, நேச உறவை ஏற்றுக் கொண்டதுதான். அரசியல் உலகில் — ராஜதந்திர உலகில் — எந்தப் பகையும் நீடித்துக் கொண்டே போகக் கூடாது; நட்பு வாய்ப்பைப் பயன்படுத்திக்கொண்டு நாட்டின் சுபிட்சத்தையும் பாதுகாப்பையும் பெருக்கிக்கொள்ள வேண்டும் என்ற முதல் பாடத்தை நேற்றுப் பிறந்த இஸ்ரேல் உணர்ந்திருக்கிறது.



காப்டன் சீமா



நவாங் கோம்பு



கோஷ்டியின் தலைவர் கோஹ்லி

## எவரெஸ்ட் சாதனை

மகத்தான சாதனை ஒன்றை யாரேனும் புரிந்துவிட்டால் அதனை 'இமாலய சாதனை' என்கிறோம்; இமாலயத்தின் உச்சியிலேயே ஏறி, எவரெஸ்டின்மீது வெற்றிவீரராக நிற்பதை என்னவென்று சொல்லி வர்ணிப்பது?

'வெள்ளிப் பனிமலையின் மீதுலவுவோம்' என்று வீராவேசமாகப் பாடினார் பாரதியார். இதோ நம் இந்திய வீரர்களான ஏ. எஸ். சீமாவும் நவாங் கோம்புவும் மேமாதம் 20ந் தேதி எவரெஸ்ட் உச்சியில் ஏறி அரை மணி நேரம் வெற்றிக் களிப்புடன் நின்றார்கள்.

இந்திய கோஷ்டியில் ஸோனம் கயாட்ஸோவும், ஸோனம் வாங்கியால் என்ற இளைஞனும் இந்தச் சாதனையை இரண்டாவது முறை நிறைவேற்றினார்கள். விளையாட்டுக்களில் மூன்று தடவை சேர்ந்து வெற்றி யிட்டினும் அதனை 'ஹாட் ட்ரிக்' என்று மகிழ்ந்து கொண்டாடுவார்கள். அதேபோல் மூன்றும் முறையாகப் புகழைத் தேடித் தந்தவர்கள் வி. பி. வோகராவும் அங் காமியும் ஆவர். இந்திய மலையேறும் கோஷ்டியினர் நான்காவது முயற்சியாக எவரெஸ்ட் சிகரத்தை அடைய விருக்கின்றனர். இதிலும் வெற்றி பெற்றுவிட்டால் அது ஈடு இணையற்ற சாதனைதான்.

ஓர் அதிதீவிர பகுத்தறிவுவாதி 'இத்தனை சிரமப்பட்டாவது எவரெஸ்ட் சிகரத்தை எதற்காக எட்டிப் பிடிக்க வேண்டும்?' என்று காரணம் கேட்டதற்கு, 'எவரெஸ்ட் சிகரம் என்று ஒன்று இருக்கிறதே, அதனால்தான்' என்று பதில் அளித்தார் ஒரு பிரபல மலையேறும் நிபுணர். அத்தகைய மலையேறும் ஆர்வம் மிக்கவர்களுக்குத்தான் மலைச்சிகரங்கள் விடும் சவாலும் கேட்கும்; அவர்களால்தான் அதைப் புரிந்துகொள்ளவும் முடியும். என்றுனும் இன்றைய இந்தியக் கோஷ்டியினர் பெற்ற வெற்றியை, எத்தனை துன்பங்கள் நேர்ந்தாலும் அவற்றைச் சகித்துப் போராடி முன்னேறத் துடிக்கும் இளைய பாரதத்தினுடைய தளராத இதயத்தின் பிரதிபலிப்பாகக் கருதி யாருமே மகிழ முடியும்.

## அறச் செல்வரின் மறைவு

ஸ்ரீமான் வி. ஆர். ராமநாதய்யர், 'தரும மிகு சென்னை' என்ற பெயரைக் காப்பாற்றுவதில் மிக அக்கறை கொண்டிருந்தார். மிக எளிய முறையில் வாழ்க்கையைத் தொடங்கிய ஸ்ரீ ராமநாதய்யர் தமது தொழில் திறமையாலும், தர்ம சிந்தையாலும் சென்னையின் மேயர் பதவிவரை உயர்ந்தார். அவர் மேயர் பதவி வகித்தது ஓராண்டு காலம்தான் என்றாலும் அவர் இறக்கும்வரை மேயர் ராமநாதய்யர் என்றுதான் சென்னை மக்கள் குறிப்பிட்டு மகிழ்ந்து வந்தார்கள். அவர் மேயராக இருந்த காலத்தில்தான் சைக்கிள் வரி எடுக்கப்பட்டு, அது ஏழை எளியவர்களுக்குப் பெரும் ஆதரவாய் அமைந்தது. அவரது ஹோட்டல் — ராமகிருஷ்ண லஞ்ச் ஹோம் எவ்வளவு பிரபலமானதோ அவ்வளவுக்கு அவரது மாளிகையின் தோட்டமும் பிரபலம். அவரது தோட்டத்துக்குப் பல ஆண்டுகள் கலைப் பரிசு கிடைத்து வந்தது. அவருக்கு ஆஸ்திகத்திலிருந்த பற்று காரணமாகச் சமீப காலத்தில் தம் இல்லத்திலேயே ஆஸ்திகப் பிரவசனங்கள் ஏற்பாடு செய்துவந்தார். சென்னையில் எந்த நல்ல காரியம் தொடங்கினாலும் ஸ்ரீ ராமநாதய்யரின் ஆதரவு நிச்சயமாக உண்டு என்று சொல்வார்கள். அத்தகைய அறநெறிச் செல்வரின் மறைவு தமிழகத்துக்கே பெருநஷ்டமாகும். அவரது மனைவியாருக்கும் குடும்பத்தாருக்கும் நமது ஆழ்ந்த அனுதாபங்கள்.



வி. ஆர். ராமநாதய்யர்

# ராஜாஜியின் கருத்துக்கள்

எல்லாத் தொழில்களும் சர்க்காரின் கட்டுப்பாட்டில் இருக்க வேண்டும், அல்லது எல்லாத் தொழில்களையும் சர்க்காரே நடத்த வேண்டும் என்கிற சர்வப் பிரவேசத் திட்டம் வேறு; சர்வாதிகாரம் வேறு. இரண்டும் தீமையானவை என்றாலும் இவற்றுக்குள் வித்தியாசம் உண்டு. இளைஞர்கள் இதனை அறிய வேண்டும். ஒரு தனி மனிதரோ அல்லது ஒரு சிலர் அடங்கிய குழுவோ பார்லிமெண்டின் கட்டுப்பாடு இல்லாமல் ஆட்சி நடத்துவது தான் சர்வாதிகாரம். சர்வாதிகாரிகள் தங்களுடைய ஆட்சியின் கீழ் தொழில் சுதந்திரத்தை அழிக்காமலும் இருக்கக் கூடும். தொழில் சுதந்திரம் அழிக்கப்பட்டு, நாட்டுப் பொருளாதாரம் முழுவதும் சர்க்காரின் கையிலேயே அடக்கமாகியுள்ள 'ஸ்டேடிஸம்' எனப்படுகிற சர்க்கார் சர்வாதீனத் திட்டத்தைப் பார்லிமெண்ட் முறைப்படி நடக்கும் ஆட்சியிலும் காணலாம். உற்பத்தி, உற்பத்தியான பண்டங்களின் போக்குவரவு, விற்பனை, கொள்முதல் எல்லாம் சர்க்கார் கட்டுப்பாட்டில் இயங்கும் சர்வாதீனக் கொள்கையை சர்வாதிகாரத்தின் கீழும் காணலாம்; பார்லிமெண்ட் ஆட்சியிலும் காணலாம். தொழில் துறையில் சர்க்கார் சர்வாதீனம் பெற்றிருப்பதும், பூரண சர்வாதிகாரமும் ஒன்றுதான் என்றோ, அவை இரண்டும் சேர்ந்தேதான் இருக்க வேண்டுமென்றோ எண்ணலாகாது. கம்யூனிஸ ஆட்சியின் கீழ் சர்வாதிகாரம், தொழில்துறை சர்வாதீனம் இரண்டுமே சேர்ந்து காணப்படுகின்றன. சர்வாதிகாரிகளின் ஆட்சியில் சுதந்திரத் தொழில் நடத்தி முன்னேற்றம் கண்ட நாடுகளும் உண்டு.

ஃஃஃ

ருஷியாவுக்கும் சீனாவுக்கும் இடையேயுள்ள கருத்து மாறுபாடு காரணமாக இந்தியாவுக்கு நன்மை ஏற்படும் என்று எண்ணுவதற்கில்லை. எனினும் இந்நாடுகளுக்கிடையே எதனால் அபிப்பிராய பேதம் என்று அறிவது நமக்கு நன்மை தரும்.

கம்யூனிஸச் சார்பற்ற நாடுகளுடனும் சமாதானமாக உடன்வாழ வேண்டும் என்பது ருஷியாவின் கொள்கை. மற்ற நாடுகளிலும் கம்யூனிஸ ஆட்சியை ஏற்படுத்த வேண்டும் என்பது சீனாவின் தீவிரக் கொள்கை.

பொருளாதார அமைப்புப் பற்றியும் இவ்விரு நாடுகளிடையே வேற்றுமை உள்ளது. ருஷியாவில் தற்போது தனி மனிதருக்குச் சிறிதளவு சொத்து சுதந்திரம் தந்திருப்பதையும், உற்பத்தியைப் பெருக்கினால் போனஸ் தருவதையும் முதலாளித்துவம் என்றே சீனா கருதுகிறது. 'சோஷலிஸத் தியாகங்களுக்கு மேலாக முதலாளிகளின் திருப்திக்கு ருஷியா முதலிடம் அளிக்கிறது' என்று மாவ்—ஸே—துங் குறை கூறுகிறார். ருஷியாவோ உற்பத்தி பெருக வேண்டுமானால் குருஷேவின் ஆட்சியில் தனி மனிதர்களுக்கு அளிக்கப்பட்ட உரிமைகளையும், ஊக்கத்தையும் மேலும் வளர்க்க வேண்டும் என்று கருதுகிறது. 'உற்பத்தியை உயர்த்துவதே தேசத்தின் தேவை; மற்ற இலட்சிய கோஷங்களையெல்லாம் தள்ளிப்போட வேண்டும்' என்று ருஷியா தற்போது தீர்மானித்துள்ளது.

முதலாளித்துவத்தின் கீழ்தான் உற்பத்தி பெருகும் என்பதை கம்யூனிஸத்தின் தந்தையான கார்ல் மார்க்ஸ் ஒப்புக்கொண்டார். உற்பத்தி அமிதமாகிவிட்டால் விநியோகம் சீர்குலைந்துவிடும் என்றும் வெளி நாடுகளில் சந்தை தேடிப் போக நேரிட்டு அதனால் சண்டைகள் மூளும் என்றும், இது காரணமாகவே தாம் சுதந்திரத் தொழில் முறையை எதிர்ப்பதாகவும் அவர் கூறினார். ஆனால் அவர் காட்டிய கம்யூனிஸ வழியில் சென்ற ருஷியாவில் உள்நாட்டுக்குத் தேவையான அளவுகூட உற்பத்தி காண முடியவில்லை. எனவே மார்க்ஸ் ஒதுக்கி எறிந்த கொள்கையை குருஷேவ் பயன் செய்துகொண்டார். உற்பத்திப் பெருக்கத்துக்காக குருஷேவ் கம்யூனிஸ கெடுபிடியைத் தளர்த்தி, உற்பத்தியாளருக்கு உரிமைகளும், ஊக்கமும் அளித்தார். இதை மாவ்-ஸே-துங் ஆட்சேபித்தார்.

'மற்றவரிடமிருந்து கற்க மாட்டோம் என்று கூறும் செருக்கு எங்களுக்கில்லை' என்றார் குருஷேவ். நம் நாட்டின் குட்டி ஸ்டாலின்கள் யாரிடமிருந்தும் படிப்பினை பெற மறுப்பதற்குக் காரணம் செருக்கல்ல. மந்த புத்தி காரணமாகத்தான் நமது ஆட்சித் தலைவர்கள் விடாப்பிடியாகத் தங்கள் வழியிலேயே செல்கின்றனர். செருக்கை ஒருவர் தம் சங்கற்பத்தின்படி விடலாம். மந்தத்தனம் விலகுவது கடினம். இயற்கைவிதிகளை ஆழ்ந்து பரிசீலனை செய்தால்தான் ஆட்சித் தலைவர்களின் மூடப் பிடிவாதம் விலகி, புது வழியில் செல்வார்கள். 1967ம் ஆண்டில் நடக்கவிருக்கும் தேர்தலில் வெற்றி பெறும் தந்திரம் என்ன என்பதையே தியானம் செய்துகொண்டு நிர்வாகம் நடத்துவதற்குப் பதிலாக, தேசத்தில் உற்பத்தியைப் பெருக்க வழி என்ன என்பதைப் பற்றிச் சிந்தித்தால் காங்கிரஸ் தலைவர்கள் தங்கள் கொள்கையை மாற்றிக்கொள்ள இடமேற்படும்.

ஃஃஃ

பிரிட்டிஷ் ஆட்சி நடந்த காலத்தில் தைரியத்துடன் சுதந்திரமாகப் பத்திரிகைத் தொழில் நடத்திக் காட்டிய ராமாநந்த சட்டர்ஜி அவர்களின் நூற்றாண்டு விழா கொண்டாடப்படுகிறது. ராமாநந்த சட்டர்ஜியும் அவரது 'மாடர்ன் ரிவ்யூ' பத்திரிகையும் அநேக இளைஞர்களுக்குப் புதிய விழிப்பையும் உற்சாகத்தையும் அளித்தன. அவர்களில் நானும் ஒருவன். சத்தியத்தின் வெற்றியில் மக்கள் சிறிதும் சந்தேகம் கொள்ளாமலிருந்த காலம் அது. தேசப் பற்று என்ற உணர்ச்சியில் மற்ற எவ்விதக் கலப்புமில்லாமல் தூய்மையாக இருந்த நாட்கள் அவை. இந்த உணர்வு ஏற்பட உதவிய உத்தம ஆன்மாக்களில் ராமாநந்த சட்டர்ஜியும் ஒருவர். இந்திய நாடும், குறிப்பாகப் பத்திரிகையாளர்களும் அவரது நூற்றாண்டைக் கொண்டாடுவது மிகவும் பொருத்தமாகும்.

# காலச் சக்கரம்

கி. ராஜேந்திரன்



## அத்தியாயம் 7

## அழகு மயக்கம்

கொதிக்கும் வெந்நீரும் சில்லென்ற தண்ணீரும் சரியான அளவுக்குக் கலந்து கொள்ளக் கதகதப்பான வெந்நீராக விழும் 'ஷவர் பாத்'துக்கு அடியில் நின்று தலைக்கு ஸ்நானம் செய்தாள் உஷா. 'ஷாம்பூ'வைப் பயன்படுத்திக் கேசத்தின் எண்ணெய்ப் பிசுக்கை யெல்லாம் நீக்கிப் பட்டு நூலிழைகளின் குவியலைப் போல அதனை மென்மையுடையதாக்கிய பின்னர், ஒரு தடவைக்கு இரண்டு தடவையாகச் சோப்புப் போட்டுத் தேகம் முழுவதும் அழுத்தித் தேய்த்துக் குளித்த போது உஷா, வியர்த்து விட்டிருந்த உடலையோ அல்லது சாலைப் புழுதி படிந்திருந்த மேனியையோ சுத்தப்படுத்துவதாக மட்டும் நினைக்க வில்லை; தங்கப்பன் தன்னைத் தொட்டதால் ஏற்பட்ட அழுக்கை நீக்கி விடத்தான் அவள் முக்கியமாக முயன்று கொண்டிருந்தாள்!

'எல்லாம் அப்பாவைப் போன்ற அரசியல்வாதிகள் அடிக்கிற கூத்தினால் வருகிற வினைதான்! ஓட்டுக்களைக் கவருவதற்காக இவர்கள்பாட்டுக்குச் சமத்துவம் சகோதரத்துவம், எல்லோரும் ஓர் இனம் ஒரு குலம் என்று எதையாவது சொல்லி வைக்கிறார்கள். கூடவே முதலாளி - தொழிலாளி, பணக்காரன்-ஏழை என்றும் என்னத்தையாவது கிளப்பிவிட வேண்டியது. அப்பாவின் பேச்சைக் கேட்க வருகிற சேரிக் கும்பலை எடுத்த எடுப்பிலேயே அவர் 'சகோதரிகளே சகோதரர்களே' என்று

தானே அழைக்கிறார்! போதாக் குறைக்குத் 'தாய்மார்களே' வேறு! உதவாக்கரைப் பயலுகளுக்கெல்லாம் என்னைத் தொட்டுத் தூக்குகிற தைரியம் ஏன் வராது? சே! அவன் இன்னாரென்று எனக்கு அடையாளம் புரியவில்லை என்று பாசாங்கு செய்ததுகூடப் பலன் அளிக்கவில்லையே! ஆனா விடமாட்டேனென்று சுற்றிச் சுற்றி வந்து கழுத்தறுத்து விட்டான், சனியன்!'

இப்படி உள்ளத்துக்குள் குமுறியபடி அவள் ஒருவித வெறியுடனே உடலைத் தூய்மைப் படுத்திக் கொண்டிருந்த போது படபட வென்று மகேசுவரி கதவைத் தட்டியதுகூட அவள் காதுகளில் விழவேயில்லை! ''குழந்தை! உஷா! என் கண்ணில்லே! கதவைத் திறம்மா! நான் குளிப்பாட்டி விடுகிறேன்'' என்று குரல் கொடுத்தாள் மகேசுவரி. இரண்டு மூன்று தடவைகள் கதவிடித்தும், கெஞ்சிக் கொஞ்சி அழைத்தும் பயனில்லாது போகவே அவள் தன் முயற்சியைக் கைவிட்டாள். அவளுக்குத் தெரியும் உஷா ஏதாவது தீர்மானித்தால் தீர்மானித்ததுதான்! அதை மாற்ற நினைப்பதை விடக் குட்டிச்சுவரில் முட்டிக் கொண்டால் அதுகூட ஒரு வேளை கொஞ்சம் கருணை காட்டலாம்! ''தலையை நனைத்துக்கொள்ளாதே; உடம்புக்கு ஆகாது!'' என்று கூறியதுடன் தன் கடமையை அப்போதைக்கு முடித்துக் கொண்ட மகேசுவரி நிச்சயமாக அந்தக் கோரிக்கைக்கு உஷா செவிசாய்க்க மாட்டாள் என்பதையும் உணர்ந்தவளாதலால் சமையலறைக்குச் சென்று அடுப்பில் தணல் இருக்கிறதா என்று பார்த்தாள்; சாம்பிராணி டப்பாவைக் குலுக்கி அதன் உள்ளே தேவையான அளவுக்கு அதிகமாகவே சாம்பிராணி இருப்பதை உறுதிப்படுத்திக் கொண்டாள்; ஒரு கூடையையும் எடுத்துத் தூசு தட்டித் தயாராக வைத்துக் கொண்டாள்.

இரண்டாவது முறையாக முகத்துக்குச் சோப்புப் போட்டுக் கழுவிய பிறகு கண்களைத் திறந்ததும் முதன் முதலாக உஷாவின் பார்வையில் பட்டது முகத்தை அலம்பிவிட்ட அவளது உள்ளங்கைகள். அவற்றின் விரல்கள் தான் எத்தனை மெல்லியவையாகவும் நீளமாகவும் அழகுற அமைந்திருக்கின்றன! வலக்கரத்தின் விரல்கள் ஒவ்வொன்றையும் அடிவாரத்திலிருந்து மேல் முனை வரை இடக்கரத்து ஆள்காட்டி விரலால் இலேசாகத் தடவிக் கொடுத்தாள் உஷா. அவள் மேனி முழுவதும் ஒரு புல்லரிப்புப் பாய்ந்து பரவியது அப்போது. பின்னர் கைகளைத் திருப்பிப் புறங்கைகளை நோக்கினாள். விரல்களின் நுனியில் கூர்மையான முட்டை வடிவத்தில் கச்சிதமாகக் கத்திரித்து விடப்பட்டு இளஞ்சிவப்பு நிறச் சாயம் தீட்டப் பெற்ற நகங்கள் காட்சி தந்தன. அடுத்தாற்போல் அவள் கருவிழிகளின் பார்வை சற்றுக் கீழிறங்கி இளம் பச்சை ரேகைகள் ஓடும் உயர்தரப் பளிங்கினாலானது போன்ற கைகளையும் மெலிந்த தோள்களையும் கண்டன. எதிரே இருந்த கண்ணாடியை மறைத்து முகத்துக்கு நேரே உயர்ந்து நின்ற தன் கரங்களை அவள் விலக்கியதும் எதிரே தென்பட்டது ஓர் எழில் வதனம். பொல பொலவென்று அவள் தலையில் கொட்டிய நீர் நெற்றியில் வழிந்து இமைகளுக்கு மேலாகப் படர்ந்து வந்து விழுந்து சல்லாத் துணித் திரையிட்டது போல் பார்வையை மறைக்க, இலேசாகக் கலங்கியும் மங்கலாகவும் தெரிந்த அந்த இன்னொரு முகத்தைப் பார்த்துப் புன்முறுவல் பூத்தாள். அடுத்த விநாடி கண்ணாடியில் அந்தப் பிரதிபிம்பம் அவளை நோக்கிக் 'களுக்'கென்று குறும்புத்தனமாகச் சிரித்தது. உணர்ச்சிக்குவியலாக மாறினாள் உஷா. அவளது வனப்பு மிகுந்த கரங்கள் அவள் மேனியைச் சுற்றியே இறுகின.....

சூடான நீரை மேலே சொரியவிட்டதால் கனன்று சிவந்திருந்த உடம்பில், ரோஸ் நிறத்திலும் வெண்மை நிறத்திலும் மாறி மாறிப் பட்டைக் கோடுகள் போடப்பெற்று விளங்கியதும், கனமானதும் நீள, அகலங்களில் பெரியதும், மெத்தென்றிருப்பதுமான 'டர்க்கி டவ'லைச் சுற்றி நெஞ்சுக்கு மேலே இழுத்துக் கட்டிச் செருகிக் கொண்டு குளியலறையை விட்டு வெளியே வந்தாள் உஷா. அவள் நடையிலிருந்த தடுமாற்றத்தைக் கண்டு பதறிப் போய், ''என்ன உஷா? என்ன?'' என்று கலவரத்துடன் கேட்டாள் மகேசுவரி. ''ஒன்றுமில்லை அத்தை! ஏதோ நரம்பு பிசகிக் கொண்டிருக்கிறாற் போலிருக்கிறது, பாதத்தில்'' என்றாள் அவள்.

''நல்லாத்தான் இருக்கு! இந்தப் பாழாய்ப் போன குதிரை ஏற்றம் வேணும் வேணும்னு அடிச்சுக்கிட்டா கேட்டாத்தானே?'' என்று கைத்தாங்கலாக அவளை அழைத்து வந்த மகேசுவரி தரையில் தான் விரித்திருந்த பாயைச் சுட்டிக்காட்டி, ''படு, பேசாமல்!'' என்று வராத கோபத்துடன் கூறினாள். ''கதவைச் சாத்தியாச்சு.''

பாயின் எல்லைக்கு அப்பால் அகலமான இரும்புக் கரண்டியில் இருந்த தணலில் கைநிறைய சாம்பிராணியை அள்ளித் தூவிக் கூடையைக் கவிழ்த்தாள் அதன் மீது. உஷாவின் கற்றையான கூந்தலைக் கையிலெடுத்துத் தூக்கிப் பிடித்துக் கொண்டு கூடையின் மேல்புறம் கழுத்துப் பதிகிற மாதிரியாக அவளைப் படுக்க வைத்தாள். பின்னர் கூடையின் மற்ற மூன்று பக்கங்களிலும் கேசத்தைப் பரப்பினாற்போல் வைத்தாள். சாம்பிராணிப் புகை கூந்தலின் இடுக்குகளிலெல்லாம் இதமாக ஊடுருவி மணத்தது. அந்த சுகத்தையும் சுகந்தத்தையும் நிம்மதி நிறைந்த மனத்துடன் ரசித்து நீண்ட பெருமூச்செறிந்தாள் உஷா.



அவள் கேசத்தைக் கோதிவிட்டபடியே, ''சொர்ண விக்கிரகம் போல இப்படிப்பட்ட ஒரு குழந்தையைப் பெற்றுப் போட்டு விட்டு உடனேயே கண்ணை மூட உன் அம்மாவுக்கு எப்படித்தான் மனசு வந்ததோ? ஒரு தடவைகூட உன் அழகைப் பார்த்துப் பெருமைப்படக் கொடுத்து வைக்கவில்லை அவளுக்கு'' என்றாள் மகேசுவரி.

அதைக் கேட்டதும் உஷாவின் அதரங்களில் மெல்லிய புன்னகை அரும்பி மலரத் தொடங்கியது.

''உன்னுடைய இந்த உடம்பிலே தான் எத்தனை நிறங்கள்?'' என்று வியந்து கூறிப் பல்வேறு பாகங்களையும் தொட்டுக் காட்டியும், சுட்டிக் காட்டியும் விரல் விட்டு எண்ண ஆரம்பித்தாள் மகேசுவரி. ''தலை மயிரின் கறுப்பு, கண் விழிகளின் நீலம், உடலின் தங்க நிறம், ரத்த நாளங்களின் பச்சை, உதடுகளின் இளஞ்சிவப்பு, பற்களின் வெண்மை, நாவின் சிவப்பு.......''

மகுடி நாதத்தில் அசைந்தாடும் நாகத்தைப் போல் இறங்கி நெளிந்தாள் உஷா. கூடை மீதிருந்த அவள் தலை அத்தையின் மடி மேலே தவழ்ந்தது இப்போது!

''உஷா! நீ அத்தையிடம் எவ்வளவோ அன்பாய்த்தான் இருக்கிறாய்; ஆனால் திடீர் திடீரென்று உனக்கு என் மேல் கோபம் வந்து விடுகிறது. கொஞ்ச நேரத்துக்கு முன்னால் வாசல் படியில் என்னைப் பிடித்துத் தூரத் தள்ளினாயே, அதை யாராவது வேலைக்காரர்கள் பார்த்திருந்தால் அப்புறம் என்னை மதிப்பார்களா?''

''அதைப் பற்றி இப்போ என்ன அத்தை?'' என்று உதடுகளைக் குவித்து அதிருப்தி தெரிவித்தாள் அவள். வலக்கரம் மகேசுவரியின் கழுத்தை வளைத்து உலுக்கியது செல்லப் பிடிவாதத்துடன்.

''போனது போகட்டும். நான் இப்போது எந்தக் கலரில் தாவணி அணிவது? அதைச் சொல்லு முதலில்'' என்றாள் உஷா.

''நிறைய பூக்கள் போட்ட லைட் புளூ தாவணி.''

''சரி, ஜாக்கெட்?''

''மஞ்சள்!''

''கண்றாவி! உனக்கு 'டேஸ்டே' கிடையாது அத்தை! 'பேல் புளூ' ஜாக்கெட் போட்டுக் கொண்டால் தான் நன்றாயிருக்கும்.''

'' அழகு மட்டும் இருந்தால் போதுமா? கழுதைக் குட்டி கூடத் தான் அழகாயிருக்கிறது பார்க்க; பிறந்து இரண்டு நாட்கள் வரையில் ! உனக்கு அழகு இருக்கு. அது நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே போகிறது ! அதோடு பொருத்தமாக அலங்கரித்துக் கொள்ளும் விதமும் தெரிகிறது ! நான் எதையாவது உளறி வைப்பேன்; லட்சியம் பண்ணாதே ! 'இதை எடு, அதைப் போட்டு விடு, தலையை இப்படிப் பின்னு - கட்டு' என்று சொல்லிக் கொடு. செய்து விடுகிறேன்'' என்றாள் மகேசுவரி.

அலங்கரித்துக் கொள்வதற்காக உஷா எழுந்தாள். அடுத்த கணம் வேதனை தாங்காமல், ''ஐயோ, அப்பா!'' என்று கூவியபடி துவண்டு விழுந்தாள்.

அப்போதுதான் உஷாவின் இடது காலைக் கவனித்தாள் மகேசுவரி. ''அடக் கடவுளே! குழவி போல வீங்கி யிருக்கே! நான் என்ன பண்ணுவேன்?'' என்று புலம்பினாள் அவள்.

## அத்தியாயம் 8

# உயர முடியுமா?

ரயிலில் நல்ல கூட்டம். அகலமோ நீளமோ அதிகமில்லாத ரயில் அது. மலைச் சரிவில் வளைந்து வளைந்து சென்ற ரயில் பாதையில் கட்டுப்பாடு இழந்து வேகமாக இறங்கிவிடாதிருக்க மையத்தில் பல் சக்கரம் பொருத்தப்பட்டிருக்கும் எஞ்சினுடன் கூடியது. தங்கப்பனும் மற்றவர்களும் கொஞ்சம் முன்னதாகவே வந்ததால் சௌகரியமாக அமர்ந்துகொள்ள முடிந்தது.

''எக்கச்சக்கமான கூட்டமாயிருக்கிறதே. பஸ்ஸிலேயே போயிருக்கலாமோ?'' என்றார் சபாபதி.

''ஏன்? இப்போ சௌகரியமாத் தானே உட்கார்ந்துக்கிட்டிருக்கோம்? பஸ்ஸிலே இந்த வளைவுகளிலும் திருப்பங்களிலும் வேகமாக இறங்கி வயிற்றைக் குமட்டப் பிராணனை விடறதைக் காட்டிலும் இது எவ்வளவோ மேல். இயற்கைக் காட்சிகள் எல்லாத்தையும் நிதானமாப் பார்த்து ரசிக்கக்கிட்டுப் போகலாம். என்ன அவசர ஜோலி பாழாப் போறது நமக்கு?'' என்று கூறியவாறே செல்லம் தங்கப்பன் மீது அர்த்தபுஷ்டி நிறைந்த ஒரு பார்வையை வீசினாள். 'நாம் இருவரும் அருகருகே

ர்லிக்ஸ் செய்யும் நன்மைக்கு ஒரு உதாரணம் :

# எனக்கு அஷ்டமத்தில் சனி ஆறாம் இடத்தில் குரு —




"உன் உடம்பு நல்லாமைக்கு ஜாதகத்தை ஏன் பார்க்க வேண்டும்! என்று உரிமையுடன் கடிந்து கொண்டாள் சம்பு சித்தி." ஓய்ச்சலும் அசதியுமாய் ஒரு வேலையையும் கவனிக்க முடியாமல் இருப்பதற்கு நீ பார்க்க வேண்டியது டாக்டரைத் தான்." என்றாள். "டாக்டர் என்ன சாதித்துவிடப் போகிறார்!" என்றேன். ஆனால் சித்தி விடாப் பிடியாக என்னை டாக்டரிடம் போகவைத்தாள்



டாக்டர் சொன்னார்: "உங்கள் உடம்பில் ஏதும் கோளாறு இல்லை; உடலுக்குத் தேவையான போஷாக்குக் கிடைப்பதில்லை என்பதின் அறிகுறிகள் தாம் சோர்வும் அசதியும். தினமும் ஹார்லிக்ஸ் பருகுங்கள்." அன்றிரவு இதைப் பற்றி ஜோஸ்யர் சர்மாவிடம் கேட்டேன். "டாக்டர் சொல்வதைச் செய்யும்," என்றார் அவர்



சந்தேகத்துடன்தான் அன்று முதல் ஹார்லிக்ஸ் அருந்த ஆரம்பித்தேன்; ஆனால் பலன் உடனுக்குடன் தெரிந்தது! இப்பொழுதெல்லாம் தெம்பும் சுறுசுறுப்புமாய் இருக்கிறேன். சம்பு சித்திக்கு ஒரே ஆனந்தம்! டாக்டர் என்னை ஹார்லிக்ஸ் பருகும்படி சொன்னது என் ஜாதக விசேஷம் தான்!




## ஹார்லிக்ஸ் அதிக சக்தி யளிக்கிறது!

# கேசவர்த்தினி

**கேசவர்த்தினி** உங்கள் கூந்தல் நீளமாகவும், பளபளப்பாகவும், சுகாதாரமாகவும் வளர உதவுகிறது. **கேசவர்த்தினி** ரெடி மிக்ஸ்ட் ஹேர் ஆயில் உங்கள் கூந்தலுக்கு அழகு சேர்க்கிறது. **கேசவர்த்தினி** ஷாம்பூ உங்கள் கூந்தலை சுத்தமாகவும், சோபையுடனும் வைத்திருக்கிறது **கேசவர்த்தினி**-உங்கள் தினசரி அலங்காரத்தில் ஒரு முக்கிய அம்சம்







**உங்கள் கூந்தல்
பாதுகாப்பிற்கு
கேசவர்த்தினி**

**கேசவர்த்தினி ப்ராடக்ட்ஸ்,**
கோயமுத்தூர் - 1

EP-KP-3 TM

அமர்ந்து இந்த இயற்கை எழிலையெல்லாம் ஆனந்தமாக அனுபவிக்கப் போகிறோமே அத்தான்! அதை எண்ணினால் உங்களுக்கு உற்சாகமாக இல்லையா? இந்தப் பயணம் முடிவின்றி நீண்டுகொண்டே போக வேண்டும் என்று தோன்றவில்லையா?' என்றெல்லாம் அவள் விழியாலே மொழி பேசியதைப் புரிந்துகொண்டதற்கான அறிகுறிகளையே தங்கப்பனிடம் காணோம்.

அவன் தன் சட்டை, கால்சராய் பாக்கெட்டுகளில் இருக்க வேண்டியவையெல்லாம் சரியாக உள்ளனவா என்று கணக்குப் பார்த்துக் கொண்டிருந்தான். ''பர்ஸ் — ஓகே! பேனா — ஓகே! டயரி — ஓகே! கர்சிப் — ஓகே! சாவிக் கொத்து — ஓகே!'' என்று ஒவ்வொன்றாகத் தொட்டுப் பார்த்துக் கூறிவந்தவன், சட்டைப் பையிலிருந்த ஒரு காகிதத்தை எடுத்தவனாக ''இது என்ன விஷயம்?'' என்று தன்னைத்தானே வினவியவாறே அதைப் பிரித்தான். ''ச்சூ! ஹோட்டல் பில்லா!'' என்றான். அதற்குள் அது என்னவென்று மறந்ததற்காக மனம் நொந்து கொள்பவன் போல் பில்லை மடித்துப் பர்ஸில் செருகினான்.

ரயில் ஒருமுறை ஊதிவிட்டு நகர ஆரம்பித்தது. ''இருந்தாலும் பில் தொகையை நீயே முழுதும் கொடுத்திருக்க வேண்டியதில்லை, தம்பி!'' என்றார் சபாபதி. உள்ளூறத் தங்கப்பன் இவ்வாறு பெரிய மனிதன் தோரணையில் நடந்து கொண்டதில் அவருக்குப் பரம திருப்திதான்.

சாதாரணமாகத் தாமரையாகட்டும் தங்கப்பனாகட்டும் பண விஷயத்தில் ரொம்பக் 'கறார்' என்பது அவருக்குத் தெரியும். அப்படியிருந்தும் தங்கப்பன் தங்களிடம் காட்டிய இந்தத் தாராள மனப்பான்மை, மாப்பிள்ளையாகவேண்டும் என்கிற விருப்பத்தின் பிரதிபலிப்பாகத்தானிருக்க வேண்டும் என்று தீர்மானித்துத் திருப்தியை இரட்டிப்பு மகிழ்ச்சியாக மாற்றிக் கொண்டு பூரித்துப் போனார் அவர்.

''அட, சும்மா இருக்கட்டுமே மாமா! இங்கே இன்னும் ஸீஸன் ஆரம்பிக்கவில்லே. இல்லேயானால் வைச்சுத் தீட்டிவிருப்பான் தீட்டி! பரீட்சை முடிந்த கையோடே கிளம்பி வந்ததாலே பிழைச்சோம். இன்னும் பத்து நாள் தாமதிச்சிருந்தால் எல்லாம் 'டபிள் ரேட்டு'த்தான். ஹோட்டல்காரன் தானாகட்டும் என்ன செய்வான், பாவம்! வருஷத்திலே ஒன்பது மாதம் பூட்டிக் கிடக்கிற அறைகளுக்கு வாடகையை இந்த மூன்று மாசத்திலே வசூலிச்சாத்தானே உண்டு!''



''நல்லபடியா பஞ்சாயத்து யூனியன் தலைவர் தேர்தல் நடந்து முடிஞ்சுது. இனிமே கிராமம் ஒத்துமையா இருக்கணும்!''

''ரயில் டிக்கட்டையும் நீயே வாங்கிட்டே. அதுதான் யோசிக்கிறேன்!''

''கிடக்கு மாமா! 'ஏ.ஸி.'யா வாங்கிட்டேன்? 'தேர்டு'தானே. இதென்ன பிரமாதச் செலவு? உங்களுக்காக இது கூட நான் செய்யக் கூடாதா?''

சபாபதி உடம்பை நெளித்து, அசைத்து, நிமிர்ந்து, முதுகுப் பலகையில் அழுத்தமாகச் சாய்ந்தார். அதே சமயத்தில் அருகிலிருந்த மனைவியின் இடையில் இலேசாக முழங் கையால் இடித்துக் காட்டினார். ''கேட்டுக்கிட்டியா சொர்ணம்? தம்பி எத்தனை அழகாகப் பேசுது!'' — பெருமை கொந்தளித்தது அவர் முகத்தில்.

செல்லமோ அந்தக் கணமே அத்தானின் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு போய்த் தொலைவில் தெரியும் மலை அருவியில் நிறுத்தி வேடிக்கை பார்க்க வேண்டுமென்று ரொம்பவும் உரிமையோடு கற்பனை செய்ய ஆரம்பித்து விட்டாள். உவகையில் நெஞ்சு விம்மியது அவளுக்கு. உள்ளக் கிளர்ச்சியைத் தன் முகம் காட்டி விடும் என்பதை அறிவாளாதலால் நாணத்தாலும் அதே சமயத்தில் பீடிக்கப்பட்டாள். பலப்பல உணர்ச்சிகளை ஒருங்கே சமாளிக்க முடியாமல் திணறினாள்.

''செய் தம்பி! செய்! நீ செய்யாமெ எங்களுக்கு வேறு யார் செய்யப் போகிறாங்க?'' என்றாள் சொர்ணம்.

தங்கப்பன் தான் கூறியதற்கு அவர்கள் வேறு அர்த்தம் கற்பித்துக் கொண்டதைப் புரிந்து கொண்டு அவசரம் அவசரமாக, ''முக்கியமாகப் பணம் அனுப்புகிறபோது அம்மா எழுதியிருந்தாங்க: 'மாமா, அத்தை, செல்லம் எல்லாரும் சத்தியபுரிக்கு வரணும் வரணும்னு ரொம்ப நாளாச் சொல்லிக்கிட்டே, வராமே ஏமாத்திக் கிட்டிருக்காங்க. இந்தத் தடவை நீ ஊட்டியிலே தங்கிட்டு ஊர் திரும்பறதானாலும் பரவாயில்லே. அவங்களைக் கையோடே அழைச்சுக்கிட்டு வந்துடறது. அவங்களை நல்லபடியா கவனிச்சுக்கிடறது' அப்படின்னு, அதனாலே தான்!'' என்று திருத்த மசோதா கொணர்ந்தான்.

ஆனால் இது அவன் எதிர்பார்த்ததற்கு நேர் விரோதமான விளைவைத்தான் உண்டாக்கியது.

''தாமரையின் மனசு எங்களுக்குத் தெரியாததா? அதுதான் கடிதாசுக்குக் கடிதாசு அவள் உள்ளத்தைப் படிச்சடறோமே!'' என்றாள் சொர்ணம்.

தங்கப்பன் மௌனம் சாதிப்பதே நலம் என்ற முடிவுக்கு வந்தான். 'அம்மா இவர்களுக்கு என்ன எழுதியிருப்பாள்? ஊருக்குப் போனதும் முதல் காரியமாகத் தீர விசாரித்து இந்த அபத்தப் பேச்சுக்கெல்லாம் அவளையும் பக்கத்தில் வைத்துக் கொண்டே ஒரு முடிவு கட்டவேண்டும்!'

சென்னையில் அவன் கல்லூரியில் படித்து வந்த நான்கு வருஷங்களில் அவ்வப்போது தாமரை அவனுக்குச் செலவுக்குப் பணம் அனுப்பி வைப்பாள். படிப்புக்கான சம்பளப் பணம், ஹாஸ்டல் கட்டணம் ஆகியவை மட்டுமின்றித் துணிமணிகள் வாங்கவும் இதர சில்லறைச் செலவினங்களுக்கும் கூடச் சேர்த்து 'மணியார்டர்' செய்வாள். சென்ற வருடம் கோடை வெய்யில் பாழாகாமல் வடக்கே சுற்றுப் பயணம் செய்து பல நகரங்களைப் பார்த்து வரவும், இந்த விடுமுறைக்கு உதகமண்டலத்தில் சில தினங்கள் கழிக்கவும் அவளே, அவன் ஆசையை அறிந்ததும் மறுத்து ஒரு வரி எழுதாமல் உடனடியாகப் பணம் அனுப்பி வைத்தாள். இதில் மாருதியின் அபிப்பிராயமும் தனக்குச் சாதகமாக அமைந்து உதவியிருக்கும் என்று ஊகிப்பது அவனுக்குக் கடினமாயில்லை. தாமரை அவரைக் கலந்தாலோசித்துத்தான் முடிவெடுத்திருக்கிறாள் என்பதும் அவர் எழுதிய கடிதத்தின் வாயிலாகத் தங்கப்பனுக்கு விளங்கியது.

''வடக்கே பல ஊர்களைச் சுற்றிப் பார்க்க ஆவல் கொண்டிருப்பதாய் அறிந்தேன். சேர்ந்தாற்போல் இரண்டு வருஷங்கள் உன்னைப் பார்க்க முடியப் போவதில்லை என்று எண்ணும்போது வருத்தமாகத்தானிருக்கிறது. இருந்தாலும் நீ மேற்கொண்டிருக்கிற காரியம் உன் எதிர்காலத்துக்கு நல்லது என்பதால் நான் ஆட்சேபிக்கப் போவதில்லை. உன் தாயாரும் இந்த விதமாக நினைத்துத்தான் மனத்தைத் தேற்றிக்கொண்டிருக்கிறாள். உன் பயணம் பயனுள்ளதாக அமைய வேண்டும். எல்லாரும் பம்பாய்க்குப் போவார்கள்; தாஜ்மகால் ஓட்டலையும் 'கேட் வே ஆப் இந்தியா' வையும் பார்ப்பார்கள். ஆனால் ஆரே பால் பண்ணையையோ அல்லது பிம்பிரி பெனிஸிலின் தொழிற்சாலையையோ காண மாட்டார்கள். எலிபெண்டா தீவுக்குப் போவது ரொம்பச் சிரமம் என்று பேசாமல் இருந்துவிடுவார்கள். உதகையில் படகு செலுத்துவதிலும் குதிரைச் சவாரியிலும் பல நாட்களைக் கழிப்பார்கள்; குந்தா மின்சாரத் திட்டத்தைப் பற்றி அறிய ஒரே ஒரு நாள் ஒதுக்கமாட்டார்கள். வடக்கே போகும் போது 'ஸைட் ஸீயிங்' என்பார்களே அப்படி அந்த உள்ளத்துடன் உல்லாசப் பொழுது போக்குக்கான விஷயங்களை மட்டும் பார்த்துப் பயனில்லை. பாரதத்தின் புராதனமான கலைப் பொக்கிஷங்களைப் பார்த்துப் பெருமையுறக் கற்க வேண்டும்; கூடுமானபோதெல்லாம், இன்றைய தொழில் வளர்ச்சியையும் முன் அனுமதி பெற்றுக் காண வேண்டும். அவற்றையும் மேலெழுந்தவாரியாகப் பாராமல் அவை பற்றிய பல விவரங்களையும் கேட்டு அறியவேண்டும்; அலசி ஆராய வேண்டும். பிறகு 'இது சரி' என ஆமோதிக்கவும் 'இது தவறு' என்று சுட்டிக் காட்டவும் 'ஏன் தவறு' என்று விளக்கம் கூறவும் உன்னைத் தகுதி உடையவனுக்கிக் கொள்ள வேண்டும். அந்த உரிமை மட்டுமல்ல, கடமையும் உனக்கு உண்டு. ஏனெனில் நீ இந்நாட்டின் சுதந்திரப் பிரஜை!''

கடிதத்தை அன்று படித்தபோது மெய் சிலிர்த்தது போலவேதான் இன்றும் இருந்தது தங்கப்பனுக்கு. 'மாருதி ஸார் எவ்வளவு எதிர்பார்க்கிறார் என்னிடம்? அவர் வைத்த நம்பிக்கை வீண் போகாத அளவுக்கு நான் வாழ்க்கையில் உயருவேனா?'

அவரை மீண்டும் இன்னும் சில மணி நேரத்தில் சந்திக்கப் போகிறோம் என்ற நினைப்பே தங்கப்பனை மனம் நெகிழ வைத்துக் கண்களிலும் நீர்த் திரையிடச் செய்தது. (தொடரும்)

# கால்கேட்டின் மூலம் நாள் முழுவதும் வாய் துர்நாற்றத்தை அகற்றி பற்கள் சொத்தையாவதையும் தடுங்கள்!




ஏனெனில் ஒரே தேய்ப்பில் கால்கேட் டென்டல் க்ரீம், துர்நாற்றத்தையும், சொத்தையையும் உண்டாக்கும் கிருமிகளில் 85 சதவிகிதத்தை ஒழித்துவிடுகிறது.

கால்கேட், 10ல் 7 சந்தர்ப்பங்களில் உடனடியாக வாய்துர்நாற்றத்தை அகற்றுகிறது என்பதையும், உணவு உட்கொண்டவுடன் கால்கேட்டினால் பற்களைத் துலக்கும் முறையால், இதுவரை பற்பசை வரலாற்றிலேயே கண்டிராத பெருமளவில் ஏராளமானவர்களுக்குச் சொத்தை தடுக்கப்படுகிறது என்பதையும் விஞ்ஞான ஆராய்ச்சிகள் நிரூபித்துள்ளன. இந்த சாதனை கால்கேட் ஒன்றுக்குத் தான் உண்டு.

கால்கேட்டின் கிடைத்திருக்கும் நூதன நறுமணத்திற்காக, குழந்தைகள் அதனாலேயேபல் துலக்க விரும்புகிறார்கள்.

பற்சுத்தத்திற்கும், வாயின் நறுமணம் கமழவும், வெண்மையான பற்களைப் பெறவும் வழக்கமாக கால்கேட்டினால் பல்துலக்குங்கள்.

சிலர் பற்பொடியையே விரும்புகிறார். இந்தப் பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத் பவுடர் மூலம் அடையலாம். [illegible]







... உலகிலேயே பெரும்பாலானவர்கள் மற்றெல்லாப் பற்பசைகளையும் விட, கால்கேட் டென்டல் க்ரீமையே வாங்குகிறார்கள்.

[illegible]

# 31. சேவலும் மயிலும்

சயந்தன் கனவிலே கந்தவேள் சேவற் கொடியுடன் தோன்றியதாகக் கண்டோம். 'சூரபன்மன் தானே சம்ஹரிக்கப்பட்டபின் சேவலாகவும், மயிலாகவும் வந்தான்? சூரசம்ஹாரம் முடிவதற்கு முன் முருகனிடம் சேவல் ஏது?' என்று தோன்றும்.

இப்படி ஐயப்படுகிறவர்களுக்கு இதைவிட ஆச்சரியமான ஒரு விஷயத்தைக் கூற வேண்டும். சிவபெருமானின் ஆறு திருமுகங்களிலிருந்து ஆறு பொறிகள் தோன்றி அவை சரவணபவனாக உருப் பெறுமுன்பே சாக்ஷாத் முருகப் பெருமான் இருக்கத்தான் செய்தார். எந்த ஷண்முகர் தோன்ற வேண்டுமென்று தேவர்கள் பல்லாண்டு தவமிருந்தனரோ அந்த ஷண்முகர் தேவர்கள் தவம் செய்வதற்கும் முன்பிருந்தே இருக்கத்தான் செய்தார். நமக்குப் பழக்கமில்லாத தியாகராஜ கிருதியை இன்று ஒரு வித்துவான் வழக்குக்குக் கொண்டு வந்தால் அதைப் புதுமையானதாகவே கருதுகிறோம். எனினும் அது பழைமையானதுதானே? இதுவரை வழக்குக்கு வராத ஒரு புதிய பதிகமோ, பாசுரமோ இப்போது கண்டு பிடிக்கப் பட்டாலும் அவை உண்மையில் பழைமையானவையே அன்றோ? பரம்பொருள் எப்போதும் உண்டு, அது அநாதி எனில் அதன் திவ்விய உருவங்களும் என்றென்றும் உண்டு. ஆனால் புதிதாக உபாசிக்கும் போது அந்த அநாதிப் பொருள் புதிது போல் வந்துவிடுகிறது. முன்னைப்பழம் பொருட்கு முன்னைப் பழம்பொருளானது புதுமைக்கும் புதுமையாகி விடுகிறது. ஒலிகளின் ஆதாரமான நாதத்துக்கு உருவமான சேவற்கொடியையும், ஒளிகளுக்கு ஆதாரமான பிந்துவுக்கு உருவமான மயில்வாகனத்தையும் கொண்ட ஆனந்தத் தத்துவமாகிய முருகக் கடவுள் என்றும் உண்டு. ஆனால் அவர் தேவருக்கும் மற்றவருக்கும் தெரியாத மறை பொருளாக—குகையில் வாழும் குகனாக—இருந்தார். இவரையே தேவர்களின் பிரார்த்தனைக்குப் பின் ஈசுவரர் தமது நயனங்களின் மூலம் வெளியிட்டார்—பழம் பாடலைப் புதிதாகப் பாவலர் வெளியிடுவது போல். 'கொக்கரக்கோ' என்று கூவி உலகை எழுப்பும் சேவல் நாதத்தின் சின்னம்; உருவ அழகில் சிறந்த மயில் பிந்து தத்துவச் சின்னம்; அதுவே பிரணவமுமாம்; வேலாயுதம் ஞானத்தின் ஸ்வரூபம்; ஆனந்தத்தின்



கந்தன் கருணை
திருமுருக கிருபானந்தவாரியார்

உருவகமான ஷண்முகரைப் போலவே இவை யாவும் என்றென்றும் உண்டு.

ஃ ஃ ஃ

கந்தவேளின் சேவல் மயில் இவற்றின் பூர்விக விருத்தாந்தம் சிலவற்றை இப்போது காண்போம்:



கக்கிலவாது தேசத்தின் அரசருக்கு நான்கு புதல்வர்கள். அவர்களில் மூத்த புதல்வர் இருவர் அகத்தியரைச் சந்தித்தனர். ''பெருமானே! தாங்கள் எந்தத் தெய்வத்தை வணங்குகிறீர்கள்?'' என்று அகத்தியரை அரசிளங் குமரர்கள் கேட்டனர்.

''தெய்வசிரேஷ்டராகிய முருகனைத் தான் வணங்குகிறேன்'' என்றார் குறுமுனி.

''தவமுனியே! மூவுலகிலும் அதிகத் தவம் புரிந்தவர் யார்?'' என்று இளவரசர்கள் கேட்டனர்.

''எப்போதும் முக்தியின்பம் அநுபவிப்பவரே பெருந் தவம் புரிந்தவர். முக்தி இன்பம் பெறும் உபாயம் யாது? முருகப் பெருமானது திருவடித் துகள் பட்டால் போதும், முக்தி நிலைபெற்று விடலாம். முருகப் பெருமானின் வாகனமாகிய மயிலின் முதுகின் மீது அவருடைய திருவடி படுகிறது. அதே போல், அவரது துவஜமாகிய சேவல் மீதும் அவர் திருவடிபாலிக்கிறார். ஆதலால், சேவலும் மயிலும் பெருந் தவம் செய்தவை'' என்று அகத்தியர் எடுத்துக் கூறினர்.

இதனைக் கேட்ட இளவரசர் இருவரும் சேவலும் மயிலுமாகி எம்பெருமானின் செங்கமல பாதத்தைப் பெற வேண்டும் என்று எண்ணினார்கள். அகத்தியரிடம் சுப்பிரமணிய மந்திர உபதேசம் பெற்றுக் கயிலை மலைக்குச் சென்றனர். முருகப் பெருமானைக் குறித்துப் பஞ்சாக்கினி மத்தியில் ஒற்றைக் காலில் நின்று தவம் செய்தனர்.

கயிலை மலையில் சிவபெருமானைச் சேவிப்பதற்கு நாராயணர் வந்தார்; பிள்ளையாரப்பன் வந்தார்; முருகப் பெருமானும் வந்தார். சரவணப்

பொய்கையில் அவதாரம் செய்வதற்கு முன்பே முருகப் பெருமான் வந்தார்!

கயிலை மலையை அடைந்ததும், விக்நேசுவரப் பெருமான் தமது வாகனமாகிய மூஷிகத்தை வெளியில் விட்டு உள்ளே சென்றார். நாராயணர் தமது வாகனமாகிய கருடனை அதே போல் வெளியே விட்டுச் சென்றார். பிரம்மா அன்ன வாகனத்தை விட்டுச் சென்றார். சுப்பிரமணியர் மயிலையும் சேவலையும் வெளியே நிறுத்தித் தாம் மட்டும் உள்ளே சென்றார். எல்லாத் தேவரது வாகனங்களும் கயிலையில் சுவாமி சந்நிதானத்துக்கு வெளியே நின்றன.

குட்டிக் கலகம் செய்பவர்கள் எப்போதும் எங்கும் உண்டு. கருடனும் அன்னமும் சேவலையும் மயிலையும் நோக்கி, "நீங்கள் உயர்ந்த பதவியில் இருக்கிறீர்கள். உங்கள் அந்தஸ்துக்கு ஆசைப்பட்டு உங்களுடைய பதவியை அபகரிக்க வேண்டுமென்று இரண்டு ராஜகுமாரர்கள் தவம் செய்து கொண்டிருக்கிறார்கள்" என்று கோள் மூட்டின. ஒருவன் தமது பதவியில் வர முயலுகிறான் என்றால் யாருக்கும் சினம் பொங்கத்தானே செய்யும்? மயிலுக்கும் சேவலுக்கும் சீற்றம் மூண்டது. தவம் செய்து கொண்டிருந்த ராஜகுமாரர்களிடம் சென்று அவர்களைத் தாக்கித் தவத்தைக் கெடுத்து விட்டன.

தவம் தடையுற்றதே என்று ராஜகுமாரர்கள் மிகவும் விசனம் கொண்டனர். கருடனும் அன்னமும் சேர்ந்து சூழ்ச்சி செய்ததால்தான் சேவலும் மயிலும் தங்கள் தவத்தைக் கெடுத்தன என்று உணர்ந்த ராஜகுமாரர்கள் பழிக்குப் பழி வாங்க வேண்டும் என்று எண்ணினார்கள்.

பிறிதொரு நாள் சிவபெருமானைச் சேவிக்க பிரம்மா, நாராயணர், சுப்பிரமணியர், விநாயகர் ஆகியோர் கயிலை மலைக்கு வந்தனர். முன் போலவே அவர்கள் தங்கள் வாகனங்களை வெளியில் விட்டுச் சென்றனர். இச் சமயத்தில் இரு இளவரசரும் சேவல், மயில் இவற்றிடம் சென்று, "உங்களுக்குப் பலமே இல்லையாம்! கருடன் சிறகை அசைத்தால் மலையே அசையுமாம்! உங்கள் இருவருக்கும் அத்தகைய ஆற்றல் இல்லையாம். 'என் அழகு அந்த மயிலுக்கும் சேவலுக்கும் வருமா?' என்று அன்னம் வேறு பெருமை பேசுகிறது" என்று கயிறு திரித்தார்கள்.

இழிகுணங்களுக்கு எப்போதுமே குறைவிருந்ததில்லை போலும்!

தாங்கள் இகழ்ச்சிக்கு ஆளாக்கப்பட்டதாக அறிந்தவுடனே மயிலும் சேவலும் வெஞ்சினம் கொண்டன. கருடனையும் அன்னத்தையும் தாக்கின. தங்களுக்குச் சக்தியில்லை என்று அவை சொன்னதாக எண்ணித் தங்களுடைய சக்தியை யெல்லாம் திரட்டிக் கொண்டன. கருடனையும், அன்னத்தையும் போரில் கொன்றே விட்டன. இச்செய்தி விஷ்ணுமூர்த்திக்கும் சதுர்முகனுக்கும் எட்டியது.

சேவகன் தவறு செய்தால் முதலாளியிடம் போய்ச் சொல்லுவது தானே முறை? நாராயணரும், பிரம்மாவும் முருகப் பெருமானிடம் சென்று சேவலும் மயிலும் செய்த சேதத்தைக் கூறினார்கள்.

கருடனையும் அன்னத்தையும் உயிர்ப்பித்து விட்டு, நீதி தங்கிய தேவனான முருகப் பெருமான் மயிலையும் சேவலையும் அழைத்து, "என்ன நடந்தது?" என்று ராஜ கம்பீரமாகக் கேட்டார்.

"வலிமை இல்லை, அழகு இல்லை என்று கருடனும் அன்னமும் எங்களை இகழ்ச்சியாகப் பேசினவாம். ஆதலால், அவற்றைக் கொன்று விட்டோம்" என்று மயிலும் சேவலும் உண்மையை உள்ளபடி கூறின. சத்தியத்தின் சந்நிதானம் அல்லவா?

"கருடனும் அன்னமும் உங்களிடம் நேராக வந்து இகழ்ந்து பேசவில்லையே?" என்று வினவினார் முருகன்.

"இல்லை. இரண்டு ராஜகுமாரர்கள் எங்களிடம் வந்து இவ்விவரம் தெரிவித்தார்கள்" என்று மயூரமும் குக்குடமும் கூறின.

இளவரசர் இருவரையும் அழைத்தார் முருகப் பெருமான். விசாகப் பெருமான் செய்த விசாரணையில் அவர்கள் நடந்தவற்றை யெல்லாம் கூறினர்.

"மயிலாகவும், சேவலாகவும் ஆகித் தங்களுக்கு வாகனமாகவும் கொடியாகவும் திகழ வேண்டும் என்று நாங்கள் கயிலை மலையில் தவம் செய்து கொண்டிருந்தோம். அப்போது கருடனும் அன்னமும் மயிலிடமும் சேவலிடமும் சென்று, 'உங்கள் பதவியை அபகரிக்க இரண்டு ராஜ குமாரர்கள் முயல்கின்றனர்' என்று கூறின. அதைக் கேட்ட சேவலும் மயிலும் எங்களைத் தாக்கி, எங்கள் தவத்தைக் கெடுத்து விட்டன. இதனாலேயே நாங்கள் பழி வாங்கினோம்" என்று ராஜகுமாரர்கள் கூறினார்கள்.

"சேவகர் செய்யும் பிழையை யஜமானனிடம்தான் கூற வேண்டுமேயன்றி நேரடி நடவடிக்கை எடுக்கக் கூடாது என்ற நீதி மரபை நான்முகனும், திருமாலும்கூட வழுவாது கடைப்பிடித்து வர, நீங்கள் மீறியது குற்றமாகும். கருடனும் அன்னமும்

தவறு செய்திருந்தாலும் அதற்காக நீங்கள் தரும யுத்த முறையை விட்டு, ஏமாற்று வஞ்சனை செய்தது பொருந்தாது. அசத்தியத்தையும் சத்தியத்தால்தான் வெல்ல முடியும். பொய்க்கு என்றும் வெற்றி கிடையாது. உங்கள் குற்றத்துக்காக நீங்கள் அசுரர்களாகக் கடவது'' என்று சாபமிட்டார் முருகப் பெருமான். மயிலும் சேவலும் செய்த குற்றத்துக்காக அவற்றைப் பதவியிலிருந்து நீக்கி விட்டார். பதவியிலிருந்தவர்கள்தான் நீக்கப்பட்டார்களேயன்றிப் பதவி நீக்கப்படவில்லை. முருகப் பெருமானுக்கு வேறு மயிலும் வேறு சேவலும் வாகனமாக, கொடியாக அமைந்தன. இவ்விரு பதவிகளுக்காகப் பெருந்தவம் செய்து பிறகு தவறான வழியில் சென்று ஐயனின் சாபம் பெற்ற அரச குமாரர் இருவரும் ஒன்று சேர்ந்துதான் சூரபன்மனாக வந்தார்கள்.

நாதம், விந்து என்று இரண்டாகப் பிரித்துச் சொன்னாலும் உன்னத அநுபூதி நிலையில் இவையும் ஒன்றிவிடும். இவற்றைத் தனிப்பட்ட இரு வேறு தத்துவங்களாகக் கொள்ளக் கூடாது என்பதால்தான் சூரன் ஒருவனே சேவல், மயில் இரண்டும் ஆனான் என்கிறோம்.

சூரன் பூர்வ ஜன்மத்தில் செய்த தவத்துக்குப் பலன் அளிக்க வேண்டும் என்று கருதினார் சுவாமி. சூர சம்ஹாரம் செய்வதால்தான் அவன் இந்த இரு உருவங்களை அடைய முடியும் என்றே சரவணப் பொய்கையில் அவதாரம் செய்தார். அதாவது, தேவர்களின் தவத்துக்கிரங்கி, அவர்களுக்கு அருள் புரிவதற்காக மட்டும் முருகன் பிறக்கவில்லை. தேவர்களின் விரோதியான சூரன் முன் பிறவியில் செய்த தவத்துக்குமிரங்கி அவனுக்கும் அருள் செய்ய வேண்டும் என்றே அவர் உதித்தார். இவ்வாறு இருசாராரிடமும் பாரபட்சமின்றிக் கருணை புரிய எம்பிரானையன்றி வேறு யாரால் இயலும்?

சிவபெருமான் என்றைக்கு உண்டோ அன்றே சுப்பிரமணியசுவாமியும் உண்டு. சிவபெருமானின் பல்வேறு அம்சங்களில் முருகன் ஒருவர். சிவபெருமான், உமை, கணபதி, சுப்பிரமணியர் இந்நால்வரும் வேறு வேறு அல்லர்.

நெருப்பு சிவபெருமான்; நெருப்பில் உள்ள சூடு பராசக்தி; நெருப்பின் சிவப்பு வண்ணம் கணபதி; நெருப்பிலே உள்ள ஒளி முருகன்.

'டார்ச் லைட்'டை இருளில் ஒளி வீசச் செய்தால் ஒளிக் கற்றை நீண்ட தூரத்துக்குச் சென்று அங்குள்ள பொருட்களைத் துலக்கமுறச் செய்வதைக் காண்போம். அதே சமயத்தில் பல்பு உள்ள இடத்திலும் ஒளி இருக்கும். அதுபோலச் சிவபெருமானிடத்து எப்போதும் உள்ள சக்தி வெளியேயும் தனிப்படத் தோன்றினால் அம்பாள் என்கிறோம். உற்சவங்களில் சுவாமியுடனேயே ஒரு தேவி மூர்த்தம் இருக்கும். பின்னால் தனியாகவும் அம்பிகை வருவார். 'சக்களத்திகள்' என்று இவ்விருவரை கிராமியமாகச் சொல்வார்கள். அது தவறு. உடன் வரும் அன்னை டார்ச் பல்பிலேயே உள்ள ஒளி; தனித்து வருபவள் வெளியே வீசும் ஒளி. சிவத்தின் கருணை உமாதேவி, கணபதி, சுப்பிரமணியர் மூலமாய்த் தனிப்படவும் வெளிப்படுகிறது:

> **சுடரோ சிவபெருமான் சூடுபரா சக்தி**
> **இடமார் கணநாதன் செம்மை-**
> **படரொளியோ**
> **கந்தவே ளாகும் கருதுங்கால் சற்றேனும்**
> **வந்ததோ பேத வழக்கு?**

மகாதேவன் மலர்; உமை அதன் உருவம்; விநாயகர் அதன் வண்ணம்; முருகனே மலரின் மணம்.

நான்கு வேதங்களும் ஒரே மெய்ப் பொருளைச் சுட்டுவது போல், ஒரே மெய்ப்பொருள் இந்த நான்குமாய் நிற்கிறது. என்றுமுள்ள அப்பொருளுக்கு இந்த நான்கு வடிவங்கள் என்றும் உண்டு. எனவே முருகன் என்றும் உண்டு. அவரது மயில் வாகனமும், சேவற் கொடியும் எப்போதுமே உண்டு.

சயந்தனின் கனவில் வந்த முருகன் கையில் சேவற் கொடி இருந்தது எப்படி என்று இப்போது புரிகிறதல்லவா?

(தொடரும்)

## இன்றைய நாகரிகம்

இன்றைய நாகரிகம்
இன்றைய நாகரிகம்



தகிக்கிற உஷ்ணத்துக்குக் குறைவில்லை, இந்நாட்களில். இம்மாதிரியான வெயில் காலங்களில் குழந்தைகளுக்கு ஏகப்பட்ட தடபுடலாகக் கனமான சட்டைகளைப் போடுவது பாபம் என்றே சொல்லலாம்! ஒரு நிக்கர் மட்டும் அணிந்து வெற்றுடலுடன் விட்டு வைக்க மனமில்லையானால், எகிப்திய பாணியில் அமைந்த, இந்த 'ஸ்லாக்கு'களை உபயோகிக்கலாம். மேலே தோளில் இருபுறமும் பித்தான்கள் வைத்திருப்பதால் (பெரிய படம்) சாதாரணமாக நாம் பார்க்கும் கழுத்துச் சிறிதான சட்டைகளைப் போலன்றி இதனைப் போடுவதும் கழற்றுவதும் குழந்தைக்குச் சித்திரவதையாக இருக்காது! காற்றோட்டமாகத் தொளதொளவென்று அமைந்துள்ளது இது. நிக்கரில் கால்களில் மட்டும் கீழ்ப் பக்கம் பைப்பிங் செய்யப்பட்டுள்ளது. முரளி அணிந்துள்ள இத்தகைய உடையைக் குழந்தைகளுக்கு ஆண் பெண் என்ற வித்தியாசமின்றி இரு சாராருக்குமே அணிவிக்கலாம். புலி, சிங்கம், யானை, நாய்க்குட்டி போன்ற படங்கள் பிரிண்ட் செய்யப்பட்ட, அல்லது இலேசான பல ரக வர்ணங்களில் கட்டம் போடப்பட்ட துணி வகைகளை இம்மாதிரி உடைகள் தயாரிக்க உபயோகிக்கலாம். படத்தில் நீங்கள் காண்பது ட்ரலான் வகைத் துணியில் உருவானவை.

உடை உதவியவர்கள்:

லண்டன் ஸ்டோர்ஸ்
மூர்மார்க்கெட், சென்னை

புகைப்படம்:

ஸ்டில்லோகிராப் ஸ்டூடியோ

இன்றைய நாகரிகம்
இன்றைய நாகரிகம்
இன்றைய நாகரிகம்
இன்றைய நாகரிகம்





## பஞ்ச வர்ணக் கிளி

ஒரு ரேடியோப் பாடகியை, நேரில் காணாமல் அவள் பாட்டை மட்டும் கேட்டு அவன் அவளுக்கு அடிமையாகிறான். அவளை மணப்பதற்கு எல்லா ஏற்பாடுகளும் நடந்து கொண்டிருந்த சமயத்தில், வில்லனின் குறுக்கீட்டால் அவன் மீது மாசு கற்பிக்கப்பட்டுத் திருமணம் நின்று விடுகிறது. அவளை நினைந்து நினைந்து அவன் உருகுகிறான். அவள்....? படாத பாடும் பட்டு, காதலனின் வீட்டிலேயே விதவைக் கோலத்தோடு நடமாட நேருகிறது....எது எப்படியானாலும் என்ன! கடைசியில் எல்லாம் சுபம்!

கே. ஆர். விஜயா ரேடியோப் பாடகி வாணியாக வந்து நன்றாய் நடித்திருக்கிறார்.

முத்துராமனுக்கு ஆரம்பம் ஒரே ஏமாற்றமாக இருந்தாலும், முடிவு வெற்றிதானே! நடிப்பிலும் வெற்றி பெற்று விட்டார். ஜெயசங்கர் இரட்டை வேடம் தாங்கி, வில்லனாகவும், நல்லவனாகவும் நடித்து நல்ல பெயர் தட்டிக் கொண்டு விட்டார்.

கதையில் அசடு வழிகிற கட்டம் ஆள் மாறாட்டம்தான். அது ஒருசந்தர்ப்பத்தில் வந்து சட்டென்று முடிந்து விட்டால் ரசிக்கலாம். படத்தின் பெரும்பகுதி ஆள் மாறாட்டமாகவே யிருந்தால் எப்படித் தாங்குவது!

படத்தின் ஒளிப்பதிவு கலைஞர் தம்புவின் கைவண்ணத்தால் மனத்தைக் கவர்கிறது. கே. சங்கரின் திறமையான டைரக்ஷன் குழப்பமான கதையைத் தெளிவாக்கி யிருக்கிறது. ''தமிழுக்கு அமுதென்று பேர்'' என்ற பாரதிதாசன் பாட்டு இனிமையாக ஒலிக்கிறது. படத்தின் முடிவுக் காட்சிகள் விறுவிறுப்பே யில்லாமல் அலுப்படையச் செய்கின்றன.

நாகேஷ் - மனோரமாவின் கல்யாண ஏஜென்ஸி தமாஷ்கள் தமாஷா யிருக்கின்றன. ''பஞ்சவர்ணக் கிளி'' பார்ப்பதற்கு வர்ண ஜாலமா யில்லாவிட்டாலும் நன்றாயிருக்கிறது.

---




''யாதேன்'' என்ற இந்தப் படம் ஒரு புது மாதிரியான படம். திரை உலகில் ஒரு புது முயற்சி என்று சொல்ல வேண்டும். நம் விகடக் கச்சேரிகளில், ஒருவரே கணவனாகவும், மனைவியாகவும், குழந்தையாகவும் குரலை மாற்றி மாற்றிப் பேசி நடிப்பதைப் பார்த்திருக்கிறோம். இங்கு குரல் மட்டும் வெவ்வேறு மனிதர்கள் அளிக்கிறார்கள்-உருவத்தைக் காட்டாமல். படம் கிட்டத்தட்ட ஒன்றரை மணி நேரத்துக்கு மேல் ஓடுகிறது. ஒரே நடிகரின் வெவ்வேறு வகை நடிப்பைப் பார்த்துக் கொண்டிருக்க வேண்டியிருக்கிறது. நடிப்பு நன்றாகத்தான் இருக்கிறது. அதற்காக எத்தனை மணி நேரம் வேண்டுமானாலும் பார்த்துக் கொண்டிருக்க முடியுமா?

''யாதேன்'' என்றாலே நினைவுகள், பழைய ஞாபகங்கள் என்றுதான் பொருள். சூன்யமாக இருக்கும் வீட்டுக்குள் கதாநாயகன் நுழைகிறான். தான் மனைவியுடன் சண்டை போட்டுக் கொண்டு வெளியேறியது நினைவுக்கு வருகிறது. அத்துடன் அந்த நிகழ்ச்சிக்கு முன்பு அவளுடன் இன்ப இல்லறம் நடத்தியது, காதல் புரிந்தது, குழந்தைகளுடன் விளையாடியது—ஆகிய பலப் பல நினைவுகள் அவன் மனத்தில் அலைமோதுகின்றன. அந்நினைவு நிகழ்ச்சிகளை மனைவியின் குரலைக் கொடுத்தும், குழந்தைகளின் குரலை மட்டும் கொடுத்தும் டைரக்டர், சுனில் தத்தை வாழச் செய்கிறார்!

சினிமா ஒரு கலை என்று கருதுபவர்கள் நிச்சயம் பார்க்க வேண்டிய படம்.


மயக்கமடைந்த மாலதிக்கு மறுபடி இரண்டு நாட்கள் கழித்து நள்ளிரவில் நினைவு திரும்புகிறது. அப்போது அவளுக்குக் காவலாக இருந்த வேலைக்காரி நல்ல தூக்கத்திலிருக்கிறாள்.
அவள் எங்கே?
9
நான் இங்கு எப்படி வந்து உறங்கினேன்.. .....?
சித்திரம்: ரமணி..
கதை: கௌசிகன்


எப்படி இருந்தா லென்ன? இது என் அறையல்ல. ..ம்..ஏன் இப் படி என்னைத் — தள்ளி விடுகிறது? தலையைச் சுற்று கிறதே....


தலையில் இதென்ன கட்டு?.. ஓ..! அந்தப் படப்பிடிப் பில் நான் கீழே விழுந்திருக்க வேண்டும்.. ஹு..ஹு ஹு.. நல்ல வேடிக்கை. அதற்கா இத்தனை பெரிய கட்டு?


என் உருவம் ஏன் இப்படி அவலட் சணமாக இருக்கிறது? ச்சச்ச..! இப்படிக் கேவலமாக இருந்தால் எப்படி நான் ஒரு நட்சத்திரமாக முடியும்?


மயக்கத்திலிருந்து விடுபட்டிருந் தாலும் மாலதிக்கு உடல் நிலை சரியாக வில்லை. நடந்த சம்பவங் களின் நினைவுத் தொடர் அறுந்த நிலையில் அவள் தள்ளாடித் தடு மாறியபடி ரேணுகாவின் பங்க ளாவை விட்டு வெளியேறி விடுகிறாள்.


அம்மா! மோசம் போயிட்டேம்மா. மாலதியம்மாளைப் படுக்கையிலே காணோம். பங்களா பூராத் தேடி விட்டேன்.
அடிப் பாவி! என்ன சொல்கிறாய் நீ?


மாலதி எங்கும் இல்லை என்பது உறுதி யானதும் குழப்பமும் கவலையும் கொண்ட ரேணுகா...
ஹலோ, டாக்டர்! ... விளைந்து விட்டது டாக்டர். மாலதிக்கு நேற்று நள்ளிரவு பிரக்ஞை திரும்பி இருக்கிறது. எங்கள் கவனக் குறைவினால் அவள் எங்கோ ஓடி விட்டாள்... ஆமாம்... உடனே வாருங்கள்.


என்னம்மா இப்படிச் செய்து விட்டாளே? நம் இடங்களெல்லாம் பார்த்து விட்டனவே.
எனக்கு ஒன்றுமே ஓடவில்லை டாக்டர். தேடாத இடமில்லை. அவளைப் பற்றிய தகவல் ஏதும் கிடைக்கவில்லையே.


இதனால் என் மகளின் வாழ்வு அவலமாகி விட்டது ரேணுகா. மாலதிக்குப் பிரக்ஞை வந்திருந்தாலும் நினைவுகளின் தொடர்பு திரும்பி இருக்காது. அவள் அந்த போலீஸின் கண்காணிப்பில் பூட்டிக் கிடக்கும் இந்த நிலையில்...? அவள் போயிருக்கக் கூடிய இடம்...?
அந்த அயோக்கியனைத் தேடித்தான் போயிருக்க வேண்டும். ஏனென்றால் அவளுக்குத்தான் சமீப காலத்து நினைவுகளே இல்லையே.


அவனிடம் அவள் போயிருப்பாளானால் நமக்கு நம்பிக்கையே கிடையாது. தன்னால் கொல்லப்பட்டவள், கொலையுண்டவள் என்று போலீசாரால் ஊர்ஜிதம் செய்யப்பட்டவள் தன் முன் உயிரோடு வந்து நிற்பாளானால் அவளை மறுபடி அவன் வாழவிட மாட்டான். இனி அவளை அவன் நிர்ப்பயமாகக் கொல்லலாம். ஏனென்றால் அந்தக் கொலைக்கான தண்டனையை ஏற்க என் மகன் சிறையில் இருக்கிறான்.


டாக்டர், இந்த நிலையில் நாம் செய்யக் கூடியது ஒன்றே ஒன்றுதான். துப்பறியும் நிபுணரான சந்துருவின் உதவியை நாடுவதைத் தவிர வேறு மார்க்கமே இல்லை.
நான் கூட... இங்கு வரும்போது வழியில் இதையே தான் நினைத்துக் கொண்டு வந்தேன்.

தொடரும்..

அவர்கள் அழகுபற்றி அவனுக்குப் பெருமை.
அவ்வழகின் ரகசியம் அவர்களுக்குப் பொது.





# சாகஸ நிருபர்கள் சிலர்!

**கட்டுக்காவலைக் கடந்து ஷேக் அப்துல்லாவை 'ஸண்டே டைம்ஸ்' நிருபர் ஸ்டேவி உதகையில் பேட்டி கண்டது சமீபத்திய செய்தி. அதைக் காட்டிலும் பெரிய ஜாலங்களையெல்லாம் பல பத்திரிகை நிருபர்கள் கடந்த காலத்தில் புரிந்திருக்கிறார்கள்........**

**ப**த்திரிகை உலகில் ''ஸ்கூப்'' என்ற ஒரு வார்த்தை அடிபடுகிறது. யாருக்கும் கிட்டாத செய்தியை ஒரு நிருபர் எல்லாருக்கும் முன்னதாகத் தட்டிக் கொண்டு போய்ப் பிரசுரித்துவிட்டால் அது ஒரு 'ஸ்கூப்' ஆகும். இப்படிப்பட்ட ''ஸ்கூப்'' என்ற வார்த்தையை நினைத்த மாத்திரத்தில் சில பத்திரிகைக்காரர்களுக்குப் பயங்கர நினைவுகள் எழலாம். சிலபேருக்கு இனிய நினைவுகள் எழலாம். தமக்குக் கிடைக்கவிருந்த செய்தியை வேறொரு நிருபர் தமக்கு முந்தி தட்டிக் கொண்டு போய் விட்டிருந்தால் அந்நினைவு பயங்கர நினைவுதான்! தமக்கே கிடைத்திருந்தால் அதைப் போன்ற இனிய நினைவு பத்திரிகை நிருபருக்கு வேறு கிடையாது!

உதாரணமாக, 1953ம் ஆண்டு பாகிஸ்தானி நிருபர் ஒருவர், அப்துல் கபார்கானை, அவர் ஆஸ்பத்திரியில் இருந்தபோது சந்தித்துப் பேட்டி கண்ட விவரம் பத்திரிகையில் வெளியாயிற்று. அச்சம்பவம் அமெரிக்க நிருபர்கள் பாணியை நினைவுறுத்தியது. அவர்கள்தாம் செலவுக்கு அஞ்ச மாட்டார்கள்; துணிச்சலுக்கும் பேர் போனவர்கள். கிடைக்க முடியாத செய்தியைச் சாகசமாகத் திரட்டுவதிலேயே மகிழ்வார்கள். அந்த மாதிரிதான் இருந்தது இந்தப் பேட்டிச் செய்தி. கபார்கான் அவர்கள் பலத்த காவலுடன் ஆஸ்பத்திரியில் இருந்தார். இந்த நிருபர் தம்மை ஒரு டாக்டர் என்று சொல்லிக்கொண்டு ஆஸ்பத்திரியில் நுழைந்தார். போலீசார் இந்த டாக்டரைப் பற்றி யாதொரு சந்தேகமும் கொள்ளவில்லை. சௌகரியமாக எல்லைப்புறக் காந்தியை இந்த டாக்டர் பேட்டி கண்டு செய்திகளை வெளியிட்டார். ஆம். ஆறு ஆண்டுகளாகக் கிடைக்காத ஒரு பேட்டி முதல் முதலாக அவருக்குக் கிடைத்தது!

இன்னொரு சம்பவத்தைத்தான் எடுத்துக் கொள்ளுங்களேன். 1953 – ம் ஆண்டு ஆகஸ்ட்டில் ஈரான் மன்னர் நாட்டை விட்டு ஓடினார். அப்பொழுது முடி துறந்த மன்னர்களின் கோஷ்டியில் அவரும் சேர வேண்டியதுதான் என்ற நிலை. ஆயினும் இவருடைய நல்ல காலத்தின் பயனாக ஈரான் நாட்டில் சூழ்நிலை மாறி மன்னரின் ஆதரவாளர்கள் கை ஓங்கியது. ஒரு செய்தி ஸ்தாபனம் நாடிழந்து ஓடும் பாரசீக மன்னருடன் பெரிய அனுபவம் வாய்ந்த நிருபரை அனுப்ப வேண்டிய அவசியம் இல்லை என்று கருதியது போலும். மன்னரைப் பின் தொடர்ந்து செல்லும்படி அனுப்பப்பட்டார் ஓர் இளம் நிருபர். ஆனால் இந்தக் குட்டி நிருபரோ அனுபவம் வாய்ந்த நிருபர்களை மிஞ்சக் கூடியவராக நடந்து கொண்டார். எப்படியோ மன்னரின் அறைக்குள் நுழைந்து 'லபக்'கென்று கதவைத் தாழிட்டுக் கொண்டார். ஏன்? பிற செய்தி ஸ்தாபனங்களின் நிருபர்களுக்குத் தாம் உள்ளே இருப்பது தெரியாமல் இருப்பதற்குத்தான்! பிறகு ஈரானில் மன்னரின் ஆதரவாளர்கள் கை ஓங்கி யிருக்கும் செய்தியை மன்னரிடம் தெரிவித்தார். அப்போதுதான் முதன்முதலாக இச்செய்தியைக் கேட்ட மன்னர் அளவு கடந்த மகிழ்ச்சி அடைந்தார். இந்த மகிழ்ச்சியை அந்த நிருபரிடம் அறிக்கையாகத் தெரிவித்தார். அதுமட்டுமல்ல; அறையில் இருந்த டெலிபோன் மூலம் நிருபர் தம் செய்தி ஸ்தாபனத்துக்கு மன்னரின் அறிக்கையைத் தெரிவிக்கவும் அனுமதித்தார். வெளியில் நூற்றுக்கணக்கான புகைப்பட நிருபர்களும் பத்திரிகை நிருபர்களும் மன்னரைப் பேட்டி காண முடியாமல் தவித்துக் கொண்டிருந்தனர். மன்னரின் அறைதான் உள் பக்கம் தாழிடப்பட்டிருக்கிறதே! இவ்வாறு அந்தக் குட்டி நிருபர் பத்திரிகை உலக ஜாம்பவான்களுக்கெல்லாம் முதுகுக்கு மண் காட்டி விட்டார்!

'எப்பாடு பட்டாவது உனக்குப் போட்டியாக வருபவரை ஒதுக்கு' என்பது ஒவ்வொரு பத்திரிகை நிருபரின் சித்தாந்தமாகவும் இருக்கவேண்டும். போப்பாண்டவர் அருளாட்சி நடத்தும் வாடிகன் நகரில் ஒரு முக்கியமான கிறிஸ்தவ சமய விழாவைப் புகைப் படங்கள் எடுத்து வெளியிடவேண்டும் என்று ஒரு செய்தி ஸ்தாபனம் விரும்பியது. ஆனால் வாட்டிகன் காரியாலயத்தினர் ஒரு நிபந்தனை விதித்தனர். அதாவது புகைப்பட நிருபரும் அந்தச் சமயச் சடங்கு நடைபெறும் சூழ்நிலைக்கு ஒத்தவாறு பாதிரிமார்கள் போலவே உடை தரித்துப் போட்டோக்கள் எடுக்க

கே. ஆர். எஸ். சுவாமி





வேண்டும் என்று கூறியிருந்தனர். விழா தொடங்க விருந்தது. அப்பொழுது வேறொரு போட்டிச் செய்தி ஸ்தாபனப் புகைப்பட நிருபர் விழாவைப் படமெடுக்க அங்கு வந்து சேர்ந்தார். வந்தவர் உண்மையிலேயே இவரை ஓர் உயர்ந்த பாதிரி என்று நினைத்து இந்தப் போலிப் பாதிரியிடம் புகைப்படம் எடுக்க அனுமதி கோரினார். இந்தப் போலிப் பாதிரியார் கண்களை அகல விரித்து முறைத்துப் பார்த்தார். ''இங்கே நிற்காதே. இந்த இடத்தை விட்டு வெளியேறு'' என்று பாதிரி போல் கம்பீரமாக இரைந்தார். பாவம், ஒன்றும் தோன்றாமல் அந்தப் புகைப்பட நிருபர் வந்த வழியே திரும்பினார்.

1953ல் எவரெஸ்ட் சிகரத்தை வெற்றி கண்டார்கள் அல்லவா? அந்தச் செய்தி காட்மண்டுவில் இருக்கும் லண்டன் டைம்ஸ் நிருபருக்குச் சுற்றி வளைத்துத்தான் தெரிவிக்கப்பட்டது. நேரடியாக ரேடியோ மூலம் தெரிவித்தால் மற்ற நிருபர்களும் ஒரே சமயத்தில் அதைக் கேட்டறிந்துகொண்டு விடக்கூடும் என்று எவரெஸ்ட் மலை ஏறும் கோஷ்டியாருடன் சென்ற லண்டன் டைம்ஸ் நிருபர் ஒரு தந்திரத்தைக் கையாண்டார். ''மப்பும் மந்தாரமுமாகத்தான் பருவ நிலை இன்னமும் இருக்கிறது'' என்று காட்மண்டுவிலிருக்கும் நிருபருக்குச் செய்தி ஒலி பரப்பினார். இப்படி ஒரு செய்தி வந்தால் எவரெஸ்ட் சிகரத்தை எட்டிப் பிடித்தாகி விட்டது என்று பொருள் படுத்திக் கொள்ள வேண்டும் என்று ஏற்கனவே அவர்கள் பேசி ஏற்பாடு செய்து கொண்டிருந்தார்கள் என்பது மற்றவர்களுக்கு அப்போது எப்படித் தெரியும்?



இதே மாதிரியான தந்திரத்தை 1914 – 18-ல் நடந்த உலக மகாயுத்தத்தில் ஓர் அமெரிக்க நிருபர் கையாண்டார். ஜெர்மானியரால் கைப்பற்றப்பட்ட டச்சு நாட்டில் மக்கள், டைக்ஸ் எனப்படும் மதில்களை உடைத்து விட்டுத் தேசத்தில் கடல் நீர் உட்புகச் செய்து வெள்ள மயமாக்கி விட்டார்கள். இச்செய்தியை வெளியில் பரவாமல் தடுத்து வந்தனர் ஜெர்மானியர். ஓர் அமெரிக்க நிருபர் என்ன செய்வதென்று யோசித்தார். பிறகு பின்கண்டவாறு தமது காரியாலயத்துக்குத் தந்தி அனுப்பினார்: ''இன்று ஹாலந்து தேசம் ஜூலை மாதத்திய அமெரிக்க நியூ ஆர்லியன்ஸ் நகரம் போல் காணப்படுகிறது.'' ஒவ்வொரு ஜூலை மாதமும் மிஸிஸிபி நதியில் வெள்ளம் பெருகி நியூ ஆர்லியன்ஸ் நகரம் வெள்ளக் காடாகி விடுவது உண்டு. ஆகவே அந்தச் செய்தி ஸ்தாபனம் தங்கள் நிருபர் அனுப்பிய தந்தியின் உட்பொருளைப் புரிந்துகொண்டு விட்டது. மறுநாள் எல்லாப் பத்திரிகைகளும், ஹாலந்து தேச மக்கள் ஜெர்மானியர் மேலும் முன்னேறி வருவதைத் தடுக்கத் தங்கள் நகர மதில் சுவர்களை இடித்துத் தள்ளிவிட்டார்கள் என்று செய்தி வெளியிட்டன.



1904ம் ஆண்டு ரஷ்யாவுக்கும் ஜப்பானுக்கும் யுத்தம் நடந்ததல்லவா? அப்பொழுது பிரிட்டிஷ் நிருபர் ஒருவர் தமது சகாக்களிடம் ஓர் ஏற்பாடு செய்துகொண்டிருந்தார். அதாவது அவர் அனுப்பும் செய்தியில் ஒரு வார்த்தையை விட்டு ஒரு வார்த்தை சேர்த்துப் படித்துக் கொண்டு வந்தால் தாம் அனுப்பும் செய்தியின் உண்மையான பொருள் புரிந்து விடும் என்று கூறியிருந்தார்!

மகாத்மா காந்திக்கும் ஜனாப் ஜின்னாவுக்கும் 1944ல் நடைபெற்ற கடிதப் போக்குவரத்து பற்றிய முழு விவரங்களும் முதன் முதலாகப் பத்திரிகைகளில் வெளியானபோது இந்திய அரசியல் உலகம் திடுக்கிட்டது. இரு தலைவர்களும் நிருபர் மூலம் வெளி உலகத்துக்கு இந்தச் செய்தியை அளித்த குற்றவாளி தம் குழுவில் இல்லை என்று கூறினர். ஜனாப் ஜின்னாவோ ''எனது இல்லம் இரும்புக் கோட்டை'' என்றார்.



காந்தியடிகளோ இம்மாதிரி விஷயங்களில் தாம் எவ்வளவு ஜாக்கிரதையாக இருப்பவர் என்பது உலகறிந்த விஷயம். அதை மீண்டும் எடுத்துச் சொல்ல வேண்டிய அவசியம் இல்லை என்று கூறி விட்டார்.

காங்கிரஸ் மேலிடத்தாருக்கு இந்தக் கடிதங்களைக் கண்டு வெளியிட்ட நிருபர் யார் என்று தெரியும். அவரிடம் சென்று காந்தி மகான் குழுவிலிருந்து தமக்கு இந்தச் செய்தி கிடைக்கவில்லை என்று அறிக்கை வெளியிடும்படி வற்புறுத்தினார்கள். ஆனால் அவர் பத்திரிகை ஒழுக்க நெறியில் உறுதியாக நின்று அப்படி ஓர் அறிக்கை வெளியிட மறுத்து விட்டார். மறுக்காமல் அப்படி ஓர் அறிக்கை வெளியிட்டிருந்தாரானால் குற்றம் முழுதும் ஜின்னா கோஷ்டியாரின் மேல் விழுந்திருக்கும். காங்கிரஸ்காரர்களின் வேண்டுகோளை நிராகரித்ததற்குப் பலனாக அவர் தம் உத்தியோகத்தையே இழக்க நேர்ந்தது. ஆனாலும் அவர் நேர்மை பிறழவில்லை. இப்படி ஓர் அற்புதச் செய்தியை முதன் முதல் கொண்டு வந்ததற்கு அவருக்குப் பரிசாகக் கிடைத்ததெல்லாம் அற்பத் தொகையான ஆயிரம் ரூபாய்தான். சமீபத்தில்தான் அந்த நிருபர் தமக்கு அந்தச் செய்தி எப்படிக் கிடைத்தது என்ற ரகசியத்தை வெளியிட்டார். ஜின்னாவின் காரியதரிசியின் மூலம் அவர் அந்தக் கடிதங்களைப் பெற்றிருக்கிறார். அவற்றைக் காரியதரிசிக்குத் தெரியாமல் புகைப்படம் எடுத்துக் கொண்டு திருப்பித் தந்து விட்டிருக்கிறார்!

சில சமயம் பத்திரிகை நிருபர்களுக்கு நல்ல செய்திக் கதை கிடைத்து விட்டாலும் அதை மற்ற நிருபர்களுக்கு முன்னதாகத் தங்கள் பத்திரிகைகளுக்கு அனுப்புவதில் சங்கடங்கள் ஏற்பட்டு விடுவதுண்டு. நியூயார்க் நகரத்தினின்று வெகு தொலைவில் உள்ள ஒரு முக்கியமான நிகழ்ச்சியில் பங்கெடுத்துக் கொண்டுவிட்டு ஒரு சில அமெரிக்க நிருபர்கள் ரயிலில் திரும்பிக் கொண்டிருந்தனர். அந்த ரயிலோ வழியில் எங்கும் நிற்காமல் வேகமாகச் செல்லும் ரயில். ஆகவே அவர்களுக்கு வழியில் இறங்கித் தந்தி கொடுக்க வசதி இருக்கவில்லை. ஆனால் ஒரு நிருபர் துணிச்சலான ஒரு காரியம் செய்தார். தாம் பங்கு பற்றிய நிகழ்ச்சியைப் பற்றி ஒரு சுருக்கமான விவரம் தயாரித்தார். அதைத் தந்தி மூலம் அனுப்பச் செலவு எவ்வளவு ஆகும் என்று கணக்கிட்டார். அந்தத் தொகைக்கு இரண்டு பங்குக்கு மேலான தொகையை (டாலர் நோட்டுகளை) செய்திக் குறிப்புடன் இணைத்தார். அத்துடன் இந்தச் செய்தியை யார் முதலில் கண்டெடுக்கிறார்களோ அவர்கள் தபால் நிலையத்துக்குச் சென்று தம் பத்திரிகைக் காரியாலயத்துக்குத் தந்தி அனுப்பி விடும்படி ஒரு கோரிக்கையையும் இணைத்திருக்கிறார். தந்திக்குப் போக மிச்சப் பணத்தை அவருடைய தொண்டுக்குப் பிரதி உபகாரமாக வைத்துக் கொள்ளும்படி கேட்டுக் கொண்டிருந்தார். இப்படி எழுதிய குறிப்பையும், செய்தியையும், பணத்தையும் போகிற ரயிலிலிருந்து வெளியே எறிந்தார். அவ்வளவுதான்; அவர் நியூயார்க் நகரத்தைச் சென்றடைந்த போது எல்லாப் பத்திரிகைகளுக்கும் முன்னதாக அவருடைய பத்திரிகை அச் செய்தியைத் தாங்கி வெளி வந்திருந்தது!

செக்கோஸ்லோவேகியா நாட்டில் ஒரு பெண்மணி அமெரிக்கப் பத்திரிகையின் நிருபராக வேலை செய்து வந்தார். அவர் முக்கியமானதொரு பேட்டியைத் தமது பத்திரிகைக்குத் தந்தி கொடுக்க விரும்பினார். ஆனால் அதற்கு வேண்டிய பணம் அவரிடம் இருக்கவில்லை. எனினும் தந்தி போய்ச் சேர வேண்டிய இடத்தில் தந்திக் கட்டணத்தை வசூல் செய்து கொள்ளும் வகையில் தமது செய்தியை அனுப்பக் கோரினார். ஆனால் தந்தி அனுப்பும் உத்தியோகஸ்தர் இவ்வசதி செய்து தர மறுத்தார். என்ன செய்வது என்று அந்தப் பெண் நிருபர் யோசித்தார். செக்கோஸ்லாவாகிய நாட்டின் ஜனாதிபதி பின்னஸுக்கு ஒரு தந்தி எழுதினார்:

"அன்பே, இந்தத் தந்தி உத்தியோகஸ்தரை முதலில் வேலையை விட்டு நீக்குங்கள்." இந்தத் தந்தியை அந்த உத்தியோகஸ்தரிடம் நீட்டினார். 'அன்பே!' என்று ஆரம்பமாகியிருக்கும் அந்தத் தந்தி வாசகத்தைப் படித்துப் பார்த்த உத்தியோகஸ்தரின் கண்கள் அகல விரிந்தன. முடிவில் ஒரு நிபந்தனையின் பேரில் அந்தப் பெண்மணி விரும்பியபடி செய்தியைத் தந்தி மூலம் அமெரிக்காவுக்கு அனுப்ப ஒப்புக் கொண்டார். அந்த நிபந்தனை என்ன தெரியுமா? ஜனாதிபதிக்கு அனுப்பவிருந்த தந்தியை அவள் திரும்பப் பெற்றுக் கொள்ள வேண்டும் என்பதுதான். ஜனாதிபதி உண்மையிலேயே அந்தத் தந்தியைப் பெற்றிருந்தால் என்ன செய்திருப்பாரோ!

ஓர் அதிசயமான விஷயம்: யுத்தம் வெகு மும்முரமாக நடந்து கொண்டிருந்த காலத்திலும் பிரிட்டிஷ் பத்திரிகைகள் மீது அரசாங்கம் கட்டாயத் தணிக்கை முறை அமுல் நடத்தவில்லை! எல்லாப் பத்திரிகைகளும் தாமாகவே அரசாங்கத் தணிக்கையாளர்களிடம் தங்களுக்கு வரும் செய்திகளைப் பிரசுரிக்கும் முன் காண்பித்து வந்தன. ஆனால் ரஷ்யத் தணிக்கை முறை மிகவும் கடுமையானது. 1953ம் ஆண்டு மார்ச் மாதம் 6-ந் தேதி விடியற்காலை நான்கு மணிக்கு ஸ்டாலின் இறந்து விட்டார் என்ற செய்தி வந்தது. அந்தச் சமயம் ஒரு நிருபர் மாஸ்கோவில் உள்ள மத்திய தந்தி நிலையத்திலேயே இருந்தார். ஸ்டாலினின் மரணச் செய்தி வந்ததும் இரும்புத் திரை பலமாக இறங்கி விட்டது. ரஷ்யாவிலிருந்து ஒரு செய்தியும் வெளியில் போகாதபடி தந்தி எந்திர சாதனத்தை வேண்டுமென்றே கெடுத்து விட்டார் அதனை இயக்குபவர். வெளிநாட்டு நிருபர்களோ லண்டனுக்கும் பாரிசுக்கும், ஸ்டாக்ஹோமுக்கும் தொடர்பு ஏற்படுத்தித் தரும்படி 'லபோ லபோ' என்று அடித்துக் கொண்டார்கள். ஆனால் தந்தி, டெலிபோன் ஆபரேட்டரோ இரு கைகளையும் கட்டிக் கொண்டு அமைதியாக உட்கார்ந்திருந்தார். சில நிமிஷங்கள் கழித்துத் தூங்கி வழிந்து கொண்டு யந்திரங்களைப் பழுது பார்ப்பவர் வந்தார். வந்து பழுது பார்ப்பார் என்று நினைக்கின்ற வேளை, அவர்



"இந்தாப்பா! உனக்குத் தரவேண்டிய கடன் - ஐம்பது ரூபாய்!"

ஸ்விட்ச் போர்டைத் திறந்து பிரதான கம்பிகளில் ஒன்றைப் பிடுங்கி எறிந்துவிட்டுப் போய்விட்டார்! இதைவிடப் பலத்த அடி வேறு என்ன இருக்க முடியும் நிருபர்களுக்கு? மிகச் சுடச் சுடத் தரவேண்டிய செய்தி ஆறி அவலாகப் போய்க் கொண்டிருந்தது. மூன்று மணி நேரத்துக்குப் பின்தான் இந்த நிருபர்களுக்குச் சர்வதேசத் தொடர்பு கிடைத்தது. அதற்குள் உலகத்துக்கொரு முக்கியமான செய்தி மிகப் பழைய செய்தி ஆகிவிட்டது.

சில சமயம் சம்பந்தா சம்பந்தம் இல்லாத பல்வேறு நிகழ்ச்சிகளையும் தொடர்பு படுத்திப் பார்க்க நிருபர்களுக்குத் தெரிந்திருக்க வேண்டும். அப்படிச் செய்தால் அதிசயமான செய்திக் கதை கிடைத்துவிடும். ஒரு சமயம் பிரபல பத்திரிகை நிருபரான காலஞ்சென்ற ஏ. எஸ். ஐயங்கார் ஏதோ தந்தி அனுப்பத் தந்தி நிலையத்துக்குள் சென்றார். அங்கு தந்தி அடிக்கும் உத்தியோகஸ்தர் 'பாராஜ்' என்ற வார்த்தையின் 'ஸ்பெல்லிங்'கை ஆங்கில அகராதியில் தேடிக் கொண்டிருந்தார். அந்த நாட்களில் பிரபலமான கக்கூர் அணையைப் பற்றிப் பேச்சு அடிபட்டுக் கொண்டிருந்தது. ஒருவேளை அந்தத் திட்டம் அங்கீகரிக்கப்பட்டு விட்டதோ என்ற எண்ணம் ஸ்ரீமான் ஐயங்காருக்கு எழுந்தது. உடனே சம்பந்தப்பட்ட இலாகாவில் விசாரித்தபோது அவருடைய சந்தேகம் ஊர்ஜிதமாயிற்று. இவ்விவரத்தை அவரே தமது நினைவுக் குறிப்புகளில் எழுதி வைத்திருக்கிறார்.

மற்றொரு ரசமான சம்பவத்தையும் ஸ்ரீமான் ஐயங்கார் குறிப்பிடுகிறார். சுதந்திரம் வருவதற்கு முற்பட்ட நாட்களில் ஒரு சமயம் மத்திய சட்ட சபையில் பகத் சிங் ஒரு குண்டு எறிந்தது யாருக்கும் நினைவிருக்கும். குண்டு விழுந்ததும் சட்ட சபை அங்கத்தினர்கள் பாதுகாப்பான இடத்தைத் தேடிக் கொண்டு இங்குமங்கும் ஓடிக்கொண்டிருந்தார்கள். ஆனால் ஸ்ரீமான் ஐயங்காரோ நேரே பகத் சிங்கிடமே சென்று அவரைப் பேட்டி கண்டு கொண்டிருந்தார். ஆம்! ஸ்ரீ ஐயங்கார் அங்கு போய்ச் சேர்ந்த சில நிமிடங்களுக்குப் பின்னர்தான் போலீஸ்காரர்களே வந்தார்கள்!

சிலசமயம் தேச நலனைக் கருதித் தங்களுக்கு முன்னதாகக் கிடைக்கும் செய்திகளை நிருபர்கள் வெளியிடாமலிருப்பதும் உண்டு. 1954ம் ஆண்டு பட்ஜெட் விவாதத்தின் போது நிருபர்களுக்கு பட்ஜெட் விவரம் முன்னதாகவே கிடைத்து விட்டது. எனினும் நிருபர்கள் அதனை வெளியிடவில்லை.

இந்தகையதோர்! சம்பவம் பிரிட்டனின் நிதி மந்திரியாக இருந்த டால்டனின் ராஜிநாமாவுக்குக் காரணமாகியது. டால்டன் பட்ஜெட் பிரசங்கம் புரிய பார்லிமெண்டுக்கு வந்து கொண்டிருந்தார். ஒரு நிருபர் ஒரு தந்திரமான கேள்வியைக் கேட்டு வைத்தார். சற்று அஜாக்கிரதையாக இருந்த டாக்டர் டால்டன் அவசரத்தில் ஏதோ சொல்லி வைத்தார். நிருபருக்கு அது ஒரு 'ஸ்கூப்' ஆகிவிட்டது. பார்க்கப் போனால் ஓர் அற்ப வரி பற்றிய செய்தியைத்தான் டால்டன் வெளியிட்டிருந்தார். பார்லிமெண்டிலிருந்த எதிர்க் கட்சி அங்கத்தினர்கள் இந்தச் சம்பவத்தை விவாதத்துக்குரிய விஷயமாக்கி விட்டனர். இனி பதவியிலிருப்பது முறையல்ல என்று அவர் ராஜிநாமாச் செய்தார்.

சில சமயங்களில் அரசாங்கங்கள் தங்கள் பாதுகாப்பு விதிகளைக் கறாராக அமுல் நடத்தத் தொடங்கி விடுகின்றன. போகோரில் நடைபெற்ற கொழும்பு சக்திகள் மகாநாட்டில் உப்புச் சப்பற்ற சர்க்கார் அறிக்கைகள்தான் நிருபர்களுக்குக் கிடைத்தன. ஆனால் இலங்கை பத்திரிகைகளில் மட்டும் மிக ரஸமான விவரங்கள் வெளிவந்தன. இது எப்படி நேர்ந்தது என்று துருவி ஆராய்ந்த போது, மகாநாட்டில் கலந்து கொண்ட இலங்கை சர்க்கார் பிரதிநிதிகள் சில பேர், இலங்கைப் பத்திரிகைகளின் நிருபர்களாகவும் இருந்திருக்கின்றனர் என்பது தெரிய வந்தது!

1870ல் பிரான்ஸுக்கும் ஜெர்மனிக்கும் நடைபெற்ற யுத்தத்தில் ஜெர்மானிய ராஜதந்திரி பிஸ்மார்க் லண்டன் டைம்ஸ் பத்திரிகை நிருபருக்கு எவ்வித அரசாங்கச் செய்தி அறிக்கைகளும் கொடுக்கக் கூடாது என்று ஒரு விதி செய்திருந்தார். லண்டன் டைம்ஸ் சும்மா இருக்கவில்லை. ஒரு முறை பார்த்ததை அப்படியே போட்டோ பிடித்ததுபோல் வார்த்தைக்கு வார்த்தை நினைவு வைத்துக் கொள்ளக் கூடிய அசாதாரண சக்தி பெற்ற ஒரு நிருபரை அனுப்பி வைத்தது. யுத்தம் முடிந்தது. ஜெர்மனிக்கும் பிரான்ஸுக்கும் சமாதான உடன்படிக்கை ஏற்பட்டது. உடன்படிக்கை விதிகளைப் பார்க்க நிருபர்களுக்கு ஒரு சில விநாடிகள்தான் அவகாசம் வழங்கப்பட்டது. அதனால் என்ன? மறு நாள் லண்டன் டைம்ஸ் பத்திரிகையில் மட்டுமே வரிக்கு வரி உடன்படிக்கை விவரம் பிரசுரமாகியிருந்தது. இது பிஸ்மார்க்குக்கு மிகுந்த வேதனை அளித்தது. அதிலிருந்து அரசாங்க ஆலோசனைக் கூட்டங்கள் நடந்தால், பிஸ்மார்க் "அன்பர்களே, லண்டன் டைம்ஸ் பத்திரிகையின் நிருபர் இங்கு இல்லை என்று நம்பி, நமது இன்றைய அலுவல்களைத் தொடங்குவோம்!" என்று சொல்லிக் கொண்டுதான் கூட்டத்தை நடத்துவாராம்!

# விஷமக் கொடுக்குகள்!

சாமா



1. 'நம்மிடம் எவ்வளவு பிரியம் இந்தக் கோயில் மாட்டுக்கு. நாம் இதை நம் வீட்டுக்கு அழைத்துப் போகலாம்' என்று ரவியும் சுந்தரும் அதைத் தங்கள் வீட்டுக்கு அழைத்துக்கொண்டு போனார்கள்.



2. மாடு பாடுபட்டு வளர்த்த அவர்கள் தோட்டத்தை அடியோடு மேய்ந்தது. ரவி என்ன சிரமப்பட்டு மாட்டை இழுத்தும் அதை அசைக்க முடியவில்லை. தோட்டத்தை அழித்தவுடன் தாகத்துக்காக மாடு அலைய ஆரம்பித்தது.



3. வீட்டினுள் புகுந்து மாடு தண்ணீர்ப் பானையைத் தள்ளி, தண்ணீர் குடிக்கத் தொடங்கியதுதான் தாமதம், பையன்களின் தகப்பனார் வந்து விட்டார்.



4. மாட்டை அப்படியே விட்டு விட்டு ஒன்றும் நடக்காதது போல் வேறு அறையில் போய்ப் படிக்க ஆரம்பித்தார்கள் ரவியும் சுந்தரும். மாட்டை அடித்து விரட்டினார் பையன்களின் தகப்பனார்.



5. மாட்டுக்குக் கோபம் வந்தது. அவரைத் தோட்டம் முழுதும் துரத்தித் துரத்தியடித்தது. அலறிக் கொண்டு ஓடினார் அவர். உடனே ரவியும் சுந்தரும் ஓடிவந்து மாட்டைச் செல்லமாக அழைக்க, மாடு ...



6. ... அவர்கள் பக்கம் வந்து நின்றது. அவர்களைப் பரிவோடு நக்கிக் கொடுத்தது. இதைப் பார்த்த பையன்களின் தகப்பனார் தம்மை அவர்கள் மாட்டிடமிருந்து காப்பாற்றி விட்டதாக நினைத்துச் சந்தோஷப்பட்டார்.







★ வாலாஜாபாத் இந்துமத பாடசாலையின் நாற்பத்தொன்பதாம் ஆண்டு விழா சிறப்பாக நடந்தது. ★ ஹெலன் கர்டிஸ் ஸ்தாபனத்தாரின் தயாரிப்பான டயாரா டால்கம் பவுடர் டப்பி சிறந்த வண்ண டிஸைனுக்கான நற்சான்றிதழைப் பெற்றது. ★ ஐரோப்பாவிலேயே தலைசிறந்த விளம்பர ஸ்தாபனமான லண்டன் பிரஸ் எக்ஸ்சேஞ்ச் இந்திய விளம்பர ஸ்தாபனமான அய்யர் அண்டு கம்பெனியுடன் இணைவதற்கான ஒப்பந்தம் கையெழுத்தாகிறது. ★ சென்னை அமெரிக்க நூலகத்தில் அமெரிக்க தேசிய நூலக வாரத்தில் நூல்களுள் ஒன்றை நூலகப் பயிற்சியாளர் மிஸ் வஸந்தி பார்வையிடுகிறார். ★ சென்னை பாலர் அரங்கில் அழகரடிகள் மணிவிழா குன்றக்குடி அடிகளார் தலைமையில் நடந்தது.





# ஜீவகீதம்

## அத்தியாயம் இருபத்துமூன்று

## புதிய சோதனை

அளவுக்கு மீறிய அவமானத்தாலும் அச்சத்தாலும் கிடுகிடுவென நடுங்கிக் கொண்டு நின்ற சபேசனுக்கு அந்த இக்கட்டான நிலைமையை எப்படிச் சமாளிப்பது என்றே தெரியவில்லை. 'பொழுது விடிந்தது கூடத் தெரியாமல் தூங்கிவிட்டு இப்படி அசட்டுத்தனமாக அகப்பட்டுக் கொண்டோமே! அந்தப் பெண்ணின் பேச்சை நம்பி இங்கு படுத்தது எவ்வளவு பெரிய தவறாகி விட்டது! இம்மாதிரி ஏதும் சங்கடம் ஏற்படாமல் பார்த்துக் கொள்வதாக எனக்குத் தைரியம் சொல்லிச் சென்றவள் எப்படி ஏமாந்து போனாள்? என்னைப் போல் அவளும் அயர்ந்து தூங்கி விட்டாளோ?' என்றெல்லாம் எண்ணித் தன்னைத் தானே நொந்து கொண்ட அவன் பயப்பிராந்தியோடு அங்குமிங்குமாக விழித்து நோக்கினான்.

வீட்டின் புறக்கடை வாசல் கதவுக்குப் பின்னால் மறைந்து நின்று கண்ணீர் மல்கிய கண்களுடன் அவனைப் பரிதாபமாகப் பார்த்துக் கொண்டிருந்தாள் வேதா. 'இவள் ஏன் அழுகிறாள்? இந்த வைக்கோற்போரண்டை என்னைப் படுத்துக் கொள்ளும்படி இவள்தான் சொன்னாள் என்ற விவரம் கன்னியம்மாளுக்குத் தெரிந்து அதனால் ஆத்திரமடைந்து முதலில் இவளை நையப் புடைத்து விட்டுப் பிறகே இங்கு என்னிடம் வந்திருக்கிறாளோ?' இப்படி நினைத்ததுமே அவன் மனத்தில் இன்னொரு திகில் புகுந்து குடைந்தது. 'என் மீது அளப்பரிய அன்பு செலுத்தி வரும் நச்சி இப்போது இந்நிலையில் என்னைப் பார்த்தால் என்ன நினைப்பான்? ஏதேனும் அநுசிதமான சந்தேகங்கள் கொண்டு விடுவானோ?'-தாள முடியாத சித்திரவதையை அநுபவிப்பவன் போல் உடம்பை நெளித்து முறுக்கிக்

காண்டு கன்னியம்மாளையும் நச்சி யையும் மாறி மாறிப் பார்த்தான் அவன்.

''இன்னுடா, மொறச்சுப் பார்க் கிறே, கயிலாத்து! யாரைக் கேட்டுக் கிட்டுடா இங்கே டிக்கானு போட வந்தே?'' என்று மீண்டும் ஏக இரைச் சல் போட்டுக் கூவிய கன்னியம்மாள் தன் மகன் பக்கம் திரும்பி அவன் முகத்தில் இடிப்பதுபோல் கைகளை நீட்டி, ''எல்லாம் இந்த ராஸ்கோல் பையனாலே வர்ற வினை! எங்கோ கெடக்கிற தெருப் பொறுக்கிப் பசங் களை யெல்லாம் ஊட்டுக்குக் கூட்டி யாந்து படுக்க வைக்கிறது; அப்புறம் அவனுங்க சொந்தம் கொண்டாடிக் கிட்டு நேரம் வேளை இல்லாம இங்கே வந்து டேரா போடறது! உன்னை வெட்டிப் பாடைலே வெக்க! ஊர்லே வர்ற கொள்ளை, கோமாரி உனக்கு வரக் கூடாதா?'' என்று வசைமாரி பொழிய ஆரம்பித்தாள்.

இவ்வளவையும் கேட்டுக் கொண்டு எவ்விதச் சலனமுமின்றி அமைதியாக நின்றுகொண்டிருந்த நச்சி சாவதான மாகத் தலை நிமிர்ந்து சபேசனை ஒரு கணம் கூர்ந்து பார்த்தான். பிறகு அதே நிதானத்துடன் திரும்பி, ''யம் மோவ்! இப்படிக் கொஞ்சம் வர் றியா? ஒரு விஷயம்பேசணும்!'' என்ற வாறு வீட்டை நோக்கி நடந்தான்.

''இன்னுடா கஸ்மாலம்! ரகசியமா சொல்லப் போறே? அதை இங்கே தான் சொல்லேன்!'' என்று ஆத் திரத்துடன்நீட்டி முழக்கிக்கொண்டே அவனுக்கு முன்னால் பாய்ந்து சென் றாள் கன்னியம்மாள்.

வைக்கோற் போரண்டை வேர்த்து வெலவெலத்து நின்றுகொண்டிருந்த சபேசன், இதுதான் சமயமென்று



ஜெகசிற்பியன்

தெருவை நோக்கி விரைந்தோடி வேலிப்படலைத் திறந்தபோது, நச்சி யின் வீட்டிலிருந்து ஏதோ நெல் குத்துவது போல், 'கும்கும்'மென்ற ஒலி கேட்கவே திடுக்குற்று நின்றான்.

''ஐயோ, ஐயோ! அடிக்கிறானே! பாவி மவன் கொல்கிறானே!''

சட்டிப் பானைகள் உருண்டு உடை யும் சப்தம்; கன்னியம்மாள் அலறி அழுது ஆபாச மொழிகளில் கூவி ஆர்ப்பாட்டம் செய்யும் ஓசை.

## *என் மேனியெழிலுக்கு உரிய சோப்:

# லக்ஸ்*

## என்கிறார் காஞ்சனா




**மேனியழகு... காஞ்சனாவுக்கு எவ்வளவு முக்கியமோ**
**அவ்வளவு முக்கியம் உங்களுக்கும்... எனவே அதே கவனிப்புக்குரியது!**

'மேனியழகு எனக்கும் முக்கியம், உங்களுக்கும் முக்கியம்'
என்கிறார் கட்டழகி காஞ்சனா; 'எந்தப் பெண்ணுக்கும் நிறை
மதியழகு தருவது அதுவே. நெகிழ்ச்சி மயமான நுரை
வளமும் நெஞ்சையள்ளும் நறுமணமும் கொண்ட எனது
அன்றாட அழகு சாதனமாகிய லக்ஸ் சோப்பை நீங்களும்
உபயோகித்தாலென்ன?' எழிலின் எல்லையை எய்த, உபயோகியுங்கள் லக்ஸ்!

**லக்ஸ் டாய்லெட் சோப்** சினிமா நட்சத்திரங்களின் தூய, மெல்லிளம்
அழகுசாதன சோப்: வெண்மையிலும், வானவில்லின் 4 வண்ணங்களிலும் வரும் சோப்.

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு.

லின்டாஸ் - LTS. 150-140 TM

அக்கம் பக்கத்து வீடுகளிலிருந்து ஓடி வந்த ஜனங்கள் கன்னியம்மாளின் வீட்டு வாசலில் கூட்டமாகக் கூடினர்.

''எங்கே அந்த நாதாரிப் பொண்ணு? அவன்தான் இந்தச் சோமாறிப் பையன் கிட்டே என்னமோ வத்தி வைச்சுட்டான்! அதைக் கேட்டுக்கிட்டுத்தான் என்னைப் போட்டு இப்படி மாட்டை அடிக்கிறாப்போல அடிக்கிறான்! அவளை இப்ப என்ன பண்ணுறேன் பாரு!'' என்று ஆக்ரோஷமாகக் கூறிக் கொண்டே கையிலொரு விறகுக் கட்டையுடன் தலைவிரி கோலமாக வெளியே பாய்ந்து வந்த கன்னியம்மாள் வெறி பிடித்தவள் போல் வீட்டைச் சுற்றிச் சுற்றி ஓடலானாள்.

இந்தப் பயங்கரக் காட்சியைக் கண்ட சபேசனுக்கு உதறலெடுத்து விட்டது. குதி கால்களை உயர்த்தி நின்று மாட்டுக் கொட்டகைப் பக்கம் பார்வையைச் செலுத்தினான். அங்கே, கழுநீர்த் தொட்டிக்குப் பின்னால், பருந்துக்குப் பயந்த கோழிக் குஞ்சுபோல் ஒடுங்கி உட்கார்ந்து கொண்டிருந்தாள் வேதா.

இந்தச் சமயம், தூங்கி விழித்த முகத்துடன் திண்ணையில் உட்கார்ந்திருந்த பயில்வான் தம்பையா, கன்னியம்மாளின் கூக்குரல் கேட்டு எழுந்து வந்தான். அவன் வருவதைக் கவனித்துவிட்ட சபேசன், மேலும் பீதியடைந்தவனாய் அங்கிருந்து நழுவி வேறு பக்கமாக விரைந்து சென்றுவிட்டான்.

''இன்னும்மே, கன்னிம்மா! இன்னா, காலங் கார்த்தாலே கோதாவிலே இறங்கிட்டே?'' என்று அடித்தொண்டையில் அமர்த்தலாகக் கேட்டுக் கொண்டே வேலிப் படலைத் தன் சுண்டு விரலால் தள்ளித் திறந்து கொண்டு உள்ளே வந்தான் தம்பையா. அவனைக் கண்டதும் அங்கு கும்பலாக நின்று வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்த ஜனங்கள் ஒவ்வொருவராக மெல்ல நழுவிக் கலைந்தனர்.

மாட்டுக் கொட்டகையில் வேதா ஒளிந்து கொண்டிருந்ததைப் பார்த்து விட்டுக் கோபாவேசமாக விறகுக் கட்டையை ஓங்கிக்கொண்டு ஓடி வந்த கன்னியம்மாள், தம்பையாவின் குரல் கேட்டுச் சப்தநாடியும் ஒடுங்கியவள்போல் சட்டென்று நின்றாள். அவளையறியாமலே அவள் கையிலிருந்த விறகுக் கட்டை கீழே நழுவி விழுந்தது. ''ஐயோ, அண்ணாத்தே!.... அந்தப் பையன் என்னைப் போட்டுக் குமுக்கிப்பிட்டானே! இதோ பாரு, என் கயித்தாம்பட்டை கொயுக் கட்டை மாதிரி வீங்கிப் போச்சு!'' என்று ஒப்பாரிக் குரலில் அலறி அழுதுகொண்டே அப்படியே தரையில் உட்கார்ந்து தலையிலும் வாயிலுமாக அடித்துக் கொண்டாள்.

''யாரு, நம்ம சிஷ்யப்பிள்ளை நச்சி தானே? பரவாயில்லே; நல்லாத்தான் பாய்ன்ட் பண்ணியிருக்கிறான்!'' என்று சொல்லிக்கொண்டே அவளது வீங்கிய கழுத்தை அக்கறையுடன் குனிந்து பார்த்துவிட்டு நகைத்தான் தம்பையா.

''சும்மா கெட, அண்ணாத்தே! வவுறு பத்தி எரியுது!'' என்று தன் வயிற்றிலடித்துக் கொண்ட கன்னியம்மாள், ''எனக்குக் கேப்பாரு, மேய்ப்பாரு யாருமில்லையா? இந்தப் பாயாப் போன பூலோகத்திலே பொண்ணாப் பொறந்து இப்படிப் பதங் குலையறேனே!'' என்று மீண்டும் ஓலமிட்டு அழ ஆரம்பித்தாள்.

அவளுடைய பிலாக்கணத்தைச் சட்டை பண்ணாதவன்போல் வீட்டினுள் நுழைந்த தம்பையா புறக்கடை வாசல் வழியாக வெளியே சென்று வைக்கோற் போரைச் சுற்றிக்கொண்டு வந்தவன், அப்போதுதான் மாட்டுக் கொட்டகையோரமாகப் பயப்பிராந்தியுடன் பதுங்கி நின்றுகொண்டிருந்த வேதாவைப் பார்த்துப் பரபரப்படைந்தவனாய் அவளைக் கூர்ந்து நோக்கினான். உடனே வேதா அங்கிருந்து வீட்டுக்குள் ஓடிப் புகுந்து கொண்டாள்.

உள்ளார்ந்த கோபத்துடன் தலையாட்டிக் கொண்ட தம்பையா, ''ஏ, கன்னிம்மா! இங்கே இன்னா நடந்துச்சு?'' என்று அதட்டிக் கேட்டான்.

''அந்தப் பொறுக்கிப் பையனையே கேளு, அண்ணாத்தே! அவனையே கேளு!'' என்று ஆத்திரமும் அழுகையும் தொண்டையை அடைக்கக் கூவினாள் கன்னியம்மாள்.

''யாரு, நச்சிதானே? அவன் எங்கே இருக்கிறான், காணுமே?''

''ஆங்,.... ஓடிப்பிட்டானா? உன் தலையைக் கண்டதும் ஓடிப்பிட்டிருப்பான், திருட்டு ராஸ்கோல்!... வாந்தி பேதி வந்து அவனை வாரிக்கினு போவணும்!''

''சீ, கய்தே! வாயை மூடுமே!'' என்று அதட்டிய தம்பையா, ''ஆமாம்; இன்னா விஷயம்? எதுக்கு இப்ப உனக்கும் அவனுக்கும் லடாய் மூட்டுச்சு?'' என்றான் கண்களை இடுக்கிக்கொண்டு.

''கேளு அண்ணாத்தே, அந்த அக்குறும்பைக் கேளு!'' என்றவாறு, அவிழ்ந்து கிடந்த தன் கூந்தலை வாரி முடிந்துகொண்டு ஒரு சிலிர்ப்புடன்

எழுந்து நின்ற கன்னியம்மாள் கைகளை நீட்டி நீட்டி உரத்த குரலில் சொன்னாள்: ''இந்தச் சோமாறிப் பையன், எவனோ அக்குத் தொக்கு இல்லாமல் தேசம் விட்டுத் தேசம் ஓடியாந்த ஒரு கயிலாத்தை ஊட்டுக்குக் கூட்டியாந்தான். ஐயோ பாவம்னு அவனுக்குச் சோத்தைப் படைச்சு, தண்ணியைக் கொடுத்து, பாயைப் போட்டுப் படுக்க வைச்சு அனுப்பினேன். அப்புறம் இன்னுடாளுக்கா, அவன் தினத்துக்கும் இங்கே ராத்திரியோடு ராத்திரி வந்து டேரா போட ஆரம்பிச்சான். ஒரு வயசுப் பொண்ணு இருக்கிற ஊட்லே அது எப்படி அண்ணாத்தே ஊருபேரு தெரியாத 'விடலைப் பையனைக் கூட்டி வைச்சுக்கிறது? அக்கம் பக்கத்து சனங்கள் இன்னா சொல்லுவாங்க? அதான் இந்தப் பையனைக் கூப்பிட்டு 'இது வேணாம்டா'ன்னு மருவாதையாச் சொன்னேன். இவனும் உடனே ரொம்ப 'ஞாயஸ்தன் மாதிரி தலையாட்டிப்பிட்டு அவனைக் கூட்டிக்கிட்டுப் போயிட்டான். நானும் அதோட அந்த விசயத்தை விட்டுப்பிட்டேன். இது நடந்து நாலைஞ்சு நாளாச்சு. இன்னைக்குக் காலம்பற பார்த்தா, அந்தப் பையன் இங்கே வந்து வைக்கோப்போர் மேலே மல்லாந்து படுத்துத் தூங்கிக்கிட்டு இருக்கிறான்! இது இன்னா கூத்து? எத்தினி நாளா என் கண்ணிலே மண்ணைத் தூவிப்பிட்டு இங்கே வந்து படுத்திருப்பான்? என்னோட பர்மிஷன் இல்லாம எதுக்கு இப்படித் திருட்டுத்தனமா வரணும்? கேளு, அண்ணாத்தே! அந்தப் பையனவா வந்திருப்பான்? இந்தப் பொறுக்கிப் பையனே, அந்த நாதாரிப் பொண்ணுதான் அவனுக்குத் தெகிரியம் கொடுத்து இருக்கணும், இல்லியா? அதான் கேட்டேன்; அதுக்குத்தான் அவன் இப்படி என் கயித்தை, மூஞ்சையெல்லாம் குத்திக் கொயப்பிட்டு ஓடிப்பிட்டான், இருசாதிப் பையன்!''

அவள் சொன்ன இவ்விவரங்களை வெகு கவனமாகக் கேட்டுக்கொண்டிருந்த தம்பையா ஏதோ யோசனையுடன், ''அது சரி; யாரு அந்தப் பையன்? பர்மாவிலேயிருந்து ஓடியாந்துட்டானுமே, அவனா?'' என்றான்.

''அந்தக் கஸ்மாலம்தான்! அவனை வெட்டிப் பொதைக்க!''

''என் வீட்டிலே அவன் ரெண்டொரு நாள் படுத்துக்கிட்டு இருந்தானே? இங்கே ஏன் வந்தான்?''

''ஆங்,......... பார்த்தியா அண்ணாத்தே! இதிலே என்னமோ இரிக்கக இருக்குது!''

மெல்லத் தலையாட்டிக் கொண்ட தம்பையா சட்டென்று அவளை வெறித்துப் பார்த்து, ''ஆமாம்; நீயும் உன் மகளும் டிகாஞ்சுக்கிட்டதுக்கு அந்தக் குழந்தைப் பொண்ணை எதுக்கு அடிக்கப் போனே?'' என்று கடுகடுத்த குரலில் கேட்டான்.

''இல்லே, அண்ணாத்தே!.... அவன் தான் அந்த மொரட்டுப் பையன் நச்சி விட்டே என்னைப்பத்திக் கோளு மூட்டிப்பிட்டிருக்கிறான். எப்பவும் இப்படித்தான் அவள் பேச்சைக் கேட்டுக்கிட்டு என்னை அவன் அடிக்க வர்றான்...'' என்று பயத்துடன் கூறிக் கொண்டே பின்னால் நகர்ந்தாள் கன்னியம்மாள்.

''இன்னாது? அவள் உன் மேலே கோள் மூட்டுறாளா? நீ இன்னா, அவளுக்குச் சக்களத்தியா?''

கன்னியம்மாள் மௌனமாக நின்றாள்.

''இங்கே, பாரும்மே! அந்தப் பொண்ணு மேலே மட்டும் கையை



# நீங்கள் அருந்தும் தேனீர் ஒருபொழுதும் தரத்தில் மாறுபடுவதில்லை என்பதை ப்ரூக் பாண்ட் நிச்சயப்படுத்துகின்றனர்

தேயிலைகளை ருசிகண்டு தரம் காண்பது, கலவன் செய்வது, மார்க்கெட்டில் விற்பனை செய்வது ஆகியவற்றில் 60 ஆண்டுகளுக்கு மேலான அனுபவ மூலம், நீங்கள் அருந்தும் தேனீர் உங்களுக்கு எவ்வளவு முக்கியமானது—அதாவது நறுமணமும் சுவையும் அதில் ''இப்படித்தான் இருக்க வேண்டும்'' என்பதை ப்ரூக் பாண்ட் நன்கறிவார்கள்.

மிக நேர்த்தியான கலவன்களில் ஒன்றைத் தயாரிப்பதில், ப்ரூக் பாண்டின் தேயிலை ருசிகண்டு தரம் காண்பவர்கள் பிரதி தினம் 600 வகைகளுக்கு மேலான தேயிலைகளை பரீட்சை செய்கின்றனர். இவற்றுள் வெவ்வேறான 30 தோட்டங்களின் தேயிலைகளையோ, அதற்கு அதிகமாகவோ அவர்கள் தேர்ந்தெடுக்கலாம். இதன் மூலம், இறுதியான கலவனில் நீங்கள் விரும்பும் பிரத்தியேகமான நறுமணத்திற்கும் விசேஷமான சுவையிற்கும் உத்தரவாதம் அளிக்கப்படுகிறது.

திறமைமிக்க கலவன் செய்தல் மட்டும் போதாது. அவற்றின் சுவையையும் நறுமணத்தையும் நன்கு அனுபவிக்க வேண்டுமானால், சிறந்த தேயிலைக் கலவன்கள் மெய்யாகவே புத்தம் புதியதாயிருக்க வேண்டும் என்பதையும் ப்ரூக் பாண்ட் அறிவார்கள். அசுத்தம் அடையாமலும் கேடுறாமலும் பாதுகாக்கின்ற காற்று உட்புகாத பாக்கெட்டுகளில் தேயிலையை அடைத்து வைப்பதே அதன் புத்தம் புதிய தன்மைக்கு உத்தரவாதம் அளிக்கும் ஒரே வழி.

ப்ரூக் பாண்ட் இதற்கு மேலும் செய்கின்றனர். அதாவது அவர்களது விற்பனையாளர்கள் பிரதி வாரம் 600000 கடைகளுக்கு நேரில் சென்று ப்ரூக் பாண்ட் தேயிலைகளை விநியோகம் செய்கின்றனர். உங்கள் வழக்கமான கடைகளுக்கும்தான். இதனாலேயே நீங்கள் வாங்குகின்ற ப்ரூக் பாண்ட் தேயிலை, புத்தம் புதியதில் எப்பொழுதும் உச்ச நிலையில் இருப்பதுடன்.... ஒரே இனிய சுவையையும் நறுமணத்தையும் எப்பொழுதும் தருகின்றது!



JWTBB 2409

# முந்துங்கள்!
# முந்துங்கள்!
# இன்றே!



## பாங்க் ஆஃப் பரோடா இப்பொழுது
## $7\frac{1}{2}$% வரை வட்டி அளிக்கிறது

இந்த அரிய சந்தர்ப்பத்தை நழுவவிடாதீர்கள்! இதற்குமுன் ஒருபொழுதும் இவ்வளவு உயர்ந்த வட்டி இருந்ததே இல்லை. இன்றே பாங்க் ஆஃப் பரோடாவில் ஒரு ஃபிக்ஸெட் டெபாசிட் கணக்கை ஆரம்பித்து இந்த அதிக வட்டியைப் பெறுங்கள்!

**மேற்கொண்டு வட்டி விகிதம் ஏறினாலும் இறங்கினாலும் இப்பொழுது ஆரம்பிக்கும் ஃபிக்ஸெட் டெபாசிட் மீது இதே உயர்ந்த வட்டி அளிக்கப்படும்.**

| ஃபிக்ஸெட் டெபாசிட் காலம் | | குறைந்தபட்ச தொகை | வருஷத்தில் வட்டி விகிதம் |
|---|---|---|---|
| இவ்வளவு காலமும் அதற்கு மேலும் | ஆனால் இவ்வளவு காலத்திற்குள் | | |
| 91 நாட்கள் | 6 மாதங்கள் | ரூ. 2,500/- | 5% |
| 6 மாதங்கள் | 1 வருஷம் | ரூ. 500/- | $5\frac{1}{4}$% |
| 1 வருஷம் | 2 வருஷங்கள் | ரூ. 500/- | 6% |
| 2 வருஷங்கள் | 3 வருஷங்கள் | ரூ. 500/- | $6\frac{1}{4}$% |
| 3 வருஷங்கள் | 5 வருஷங்கள் | ரூ. 500/- | $6\frac{1}{2}$% |
| 5 வருஷங்கள் | 7 வருஷங்கள் | ரூ. 500/- | 7% |
| 7 வருஷங்கள் | 9 வருஷங்கள் | ரூ. 500/- | $7\frac{1}{4}$% |
| 9 வருஷங்களும் அதற்கு மேலும் | ...... | ரூ. 500/- | $7\frac{1}{2}$% |

**சேமிப்புக் கணக்குக்கு வட்டி வருஷத்தில் 3% லிருந்து 4% ஆக அதிகரிக்கப்பட்டுள்ளது**

## தி பாங்க் ஆஃப் பரோடா லிட்.,

(ஸ்தாபிதம்: 1908) தலைமை ஆஃபீஸ்: பரோடா

JWT-BB-3718



பஸ்ஸில் 'அச்சு! அச்சு!' என்று பலமாகத் தும்மிக் கொண்டிருந்தான் சிறுவன். பக்கத்திலிருந்த நாகரிக யுவதி முகம் சுளுங்கியவளாய், ''ஏன் தம்பி! உன்னிடம் கர்சீப் இருக்கிறதா?'' என்று நாசுக்காகக் கேட்டாள்.

''இருக்கிறது; ஆனால், அதைப் பிறருக்குக் கடன் தரும் வழக்கமில்லை'' என்றான் சிறுவன்.

வைச்சே... ஆமாம்; அப்புறம் நான்றொம்பப் பொல்லாதவனு ஆயிடுவேன். தெரிஞ்சுதா?'' என்று கடுகடுத்த குரலில் சொன்ன தம்பையா, அவன் முகத்துக்கு நேரே குனிந்து, ''ஏய், நீ எதுக்கு இப்படிச் சின்ன விஷயத்துக்கெல்லாம் வரிஞ்சு கட்டிக்கிட்டுச் சண்டைக்கு நிக்கிறேங்கிறது எனக்குத் தெரியும். உனக்கு என்னமோ ஒரு பைத்தியம் பிடிச்சிருக்குது. அது இன்னான்னு சொல்லட்டுமா? புருசன் பைத்தியம்! இப்பக்கூட என்கிட்டே சொல்லும்மே; கண்ணாலம் கட்டிக்கிறயா, சொல்லு! உன் மகன் நச்சியை விட்டே உனக்கு மாப்பிள்ளை தேடிக் கட்டி வைக்கிறேன்!'' என்றான் கேலியாக.

இதைக் கேட்டுக் கழுத்தை ஒரு நொடி நொடித்துக்கொண்ட கன்னியம்மாள் வெகு அலட்சியமாக நீட்டி நெளித்துக் கூறினாள்: ''அட போ, அண்ணாத்தே! அந்தக் காப்பிரி தொரையைப் பார்த்த கண்ணாலே இனி ஒருத்தனை ஏறெடுத்தும் பார்ப்பேனா? அது இந்த ஜன்மத்திலே இல்லே!..... அவன் உதடு இன்னா, அவன் கை இன்னா, அவன் காலு இன்னா, அவன் கயித்து இன்னா — ஒண்ணொண்ணும் இந்தெந்தப் பெரிசு! நீயும் இருக்கிறியே பயில்வான்னு: அவனை நினைச்சுப்பிட்டு அப்புறம் உன்னைப் பார்த்தா எனக்கு ஐயோ, பாவம்னு இருக்குது! இங்கே பாரு, அண்ணாத்தே! இந்த ஊரு ஆம்பிளைங்களை நான் இடுப்பு மேலே தூக்கி வைச்சுக்கிட்டு நடந்துடுவேன், தெரியுமா?''

அதிகாய பாகுவான தோற்றம் கொண்ட சாண்டோ தம்பையா, அவளது இந்தப் பதிலைக் கேட்டு அப்படியே குன்றிக் குறுகியவனாய் அசடு வழியச் சிரித்துக்கொண்டு அங்கிருந்து போய் விட்டான்.

மாலை ஆறு மணி இருக்கும். அன்றெல்லாம் தெருத் தெருவாகச் சுற்றியலைந்து பல அச்சகங்களில் ஏறி இறங்கியும் எங்குமே ஜல்லி கிடைக்காததால் உள்ளமும் உடலும் சோர்ந்து நடக்கவும் திராணியற்றுப் போன சபேசன், ஒற்றைவாடைச் சாலையிலிருந்த ஒரு ஹோட்டல் வாசலில்வந்து நின்றான்.

தெரு விளக்குகள் இன்னும் எரியத் தொடங்கவில்லை. ஆனால் அந்த ஹோட்டலில் மட்டும் விளக்குப் போடப்பட்டு விட்டிருந்தது. அத்துடன் சாம்பிராணிப் புகை மூட்டமும் கமழ்ந்துகொண்டு சன்னல் வழியே சுழன்று வந்தது. நடைபாதையில் களைத்துச் சோர்ந்து நின்றிருந்த சபேசன், யாரோ தனது ஜன்மப் பகைவனொருவன் அடியாட்களோடு பம்மிப் பதுங்கித் தன்னைச் சுற்றி வளைத்துத் தாக்க வருவதைப் பார்த்து விட்டவன்போல் பயப்பிராந்தியுடன் அங்குமிங்குமாக விழித்து நோக்கினான். பகல் போது சாய்ந்து இரவு நேரம் நெருங்குவதை அறிந்தே அவன் அவ்வாறு பீதியடைந்தான்.

வழக்கம்போல், 'இன்றிரவு எங்கே படுப்பது?' என்ற கேள்வி இத்தனை நாட்களையும்விட ஒரு பயங்கர மோதலுடன் அவன் மனத்திலே தலைதூக்கியது. அதைத் தொடர்ந்து, இன்று காலை நிகழ்ந்த அவமானகரமான அந்த நிகழ்ச்சிகளும் நெஞ்சைக் கிறிக்கொண்டு நிமிர்ந்தன.

'என்னால் நச்சியின் குடும்பத்தில் எத்தனை மோசமான நிலைமை ஏற்பட்டு விட்டது! வாய்ச் சண்டையோடு நில்லாமல் கைகலப்பும் நடந்த மாதிரி சத்தம் கேட்டதே? வேதாவைக் கன்னியம்மாள் அடித்திருப்பாளோ? அல்லது நச்சி தன் தாயை அடித்து விட்டானோ? பெற்ற தாயை ஒரு மைந்தன் கை நீட்டி அடிப்பதா? அப்படியும் செய்வதுண்டா?'

அந்தக் குடிசைகள் வட்டாரத்தில் ஏற்கனவே இம்மாதிரி சம்பவங்கள் பலவற்றைப் பார்த்த ஞாபகம் அவனுக்கு வந்தது. தாயை மகன் அடிப்ப

தும், கணவனை மனைவி உதைப்பதும், மாமியாரை மருமகன் உருட்டிப் புரட்டி மிதிப்பதும், மருமகனை மாமனார் முந்தியைப் பிடித்து இழுத்துத் தள்ளிக் குத்துவதும், அண்ணியை மைத்துனன் கத்தியால் வெட்டப் போவதுமான அநாகரிக வெறிச் செயல்களைப் பார்த்து மனம் நொந்து வியந்திருக்கிறான். எனவே, நச்சி தன் தாயை அடித்திருப்பான் என்பதில் அவனுக்குச் சந்தேகம் ஏற்படவில்லை; ஆனால் அப்படியொரு பண்பற்ற தீய காரியத்துக்குத் தான் காரணமாயிருந்து விட்டோமே என்பதை எண்ணியே அவன் மனம் வருந்தினான்.

'இனி எக்காரணத்தைக் கொண்டும் அந்த வீட்டுப் பக்கமே தலை காட்டக் கூடாது. நச்சியையும் இனி மேல் சந்திக்காமல் இருப்பது நல்லது.'

இப்படி உறுதி செய்துகொண்ட மறு கணமே அவனது நெஞ்சத் திரையில் வேதாவின் அழகிய முகம் பரிதாபமாகத் தோன்றி மறைந்தது. அத்துடன் இனம் புரியாத ஏதோ ஓர் இழப்பு உணர்ச்சியும் அவன் இதயத்தின் எங்கோ ஒரு மூலையில் முள்ளெனக் குத்தித் தைத்து அவனை வேதனைக்கு உள்ளாக்கியது.

சாலை விளக்குகளெல்லாம் பளிச்சென்று எரியத் தொடங்கின. சபேசனுக்கு ஏதாவது சாப்பிட வேண்டும் போல் இருந்தது. ஜேபியைத் தட்டித் துழாவிப் பார்த்தான். கைச் செலவுக்கு வைத்திருந்த காசெல்லாம் பஸ்ஸுக்கும் டீக்குமாகச் செலவழிந்து இரண்டொரு பைசாக்களே மீதமிருந்தன. இப்போது ஹோட்டலில் சாப்பிட வேண்டுமாயின் அவனது சேமிப்பு நிதியிலிருந்துதான் பணம் எடுக்க வேண்டும். அதாவது, 'பாங்கி லாக்கரை விடப் பாதுகாப்பான அவனுடைய சட்டைப் பித்தான் மடிப்பினுள்ளிருந்து எடுத்தாக வேண்டும். அந்தக் காரியம் அத்தனை சுலபமானதா என்ன? மேலும், இவ்விடத்தில் நின்றுகொண்டு நாலு பேர்கள் பார்க்கும்படி அந்த 'இரகசிய நிதிப் பெட்டகத்தி'லிருந்து பணத்தை வெளியே எடுக்க அவனுக்குப் பயமாக மட்டுமல்ல, வெட்கமாகவும் இருந்தது.

பலத்த யோசனையுடன் நெற்றியை வருடிக்கொண்டு நின்ற சபேசன், ஹோட்டலினுள்ளே கண்ணாடி அலமாரியில் வர்ணவாரியாக அடுக்கி வைக்கப்பட்டிருந்த பட்சணங்களையும், தன் சட்டைப் பித்தான் மடிப்புக்குள் மறைந்து உப்பிக் கொண்டிருந்த ரூபாய் நோட்டுக்களையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டான். நாவில் ஜலம் ஊறி வயிற்றில் பசிக் கனல் மூண்டது. ஆனால், அந்தச் சேமிப்பு நிதியிலிருந்து ஒரு பைசாவையும் எடுத்துச் செலவிட அவன் மனம் இடம் தரவே யில்லை.

'இன்றிரவு எதுவும் சாப்பிடாமல் இருந்து விட்டால் என்ன? உயிரா போய் விடும்?'

பசி அவன் வயிற்றைப் பிழிந்து கலக்கியது. 'சரி; அதோ அந்த மரத்தடி மறைவுக்குப் போய் இன்று மட்டும் ஒரே ஒரு ரூபாய் எடுத்துக்கொண்டு தொலையலாம், வேறு வழியில்லை' என்று சலிப்புடன் முணுமுணுத்தவாறு அங்கிருந்து செல்லக் காலெடுத்தவன், ''இன்னா பிரதர்! ஓட்டலுக்கு வந்துட்டு என்னைப் பார்த்ததும் நைஸா நழுவறே? நானும் உன்கூடச் சேர்ந்து சாப்பிட வந்துடுவேன்னு பயந்துட்டியா?'' என்ற குரல் கேட்டுச் சட்டென்று திரும்பினான்.

அப்போதுதான் அங்கு வந்து நின்ற ஓர் ஆட்டோ ரிக்ஷாவிலிருந்து தன் வழக்கமான கோணல் சிரிப்புடன் இறங்கிய நச்சி, ''டோண்ட் வொர்ரி, பிரதர்! உன்னைத்தான் இப்ப தேடிக்கிட்டு இந்தப் பட்டணத்தையே ஒரு ரவுண்டு அடிச்சுக்கிட்டு வர்றேன். வா, போவலாம்'' என்றவாறு அவன் தோள்மீது கை போட்டான்.

சபேசனுக்கு என்ன செய்வது, என்ன சொல்வதென்றே தோன்றவில்லை. மகிழ்ச்சி, பயம், துயரம், கோபம், வெறுப்பு ஆகிய முரண்பட்ட உணர்ச்சிகள் பலவும் சேர்ந்து அவன் வாயை அடைத்து விடப் பிரமை பிடித்தவன் போல் மௌனமாக நின்றான்.

''சரி சரி; வா, பிரதர்!'' என்று அவனைத் தள்ளிக்கொண்டு ஆட்டோ ரிக்ஷாவை நோக்கி நடந்தான் நச்சி.

''எங்கே அண்ணா?......'' என்று உள்ளார்ந்த திகிலுடன் குழறிக் கேட்டான் சபேசன்.

''ஒரு டின்னர் பார்ட்டிக்குப் போவலாம், வா!''

''டின்னர் பார்ட்டியா?''

''ஆமாம்; அதையெல்லாம் அப்புறமா சொல்றேன், வண்டியிலே ஏறு.''

சபேசனை வலுக் கட்டாயமாக இழுத்துத் தன் பக்கத்தில் உட்கார வைத்துக்கொண்டான் நச்சி. பலத்த உறுமலுடன் கிளம்பிப் பறந்தது ஆட்டோ ரிக்ஷா.

**(தொடரும்)**

# உங்கள் கேசம் உதிருகிறதா?

இந்த மாதிரி அபாயக் குறிகள் அதை அறிவிக்கின்றன.



பொடுகு

இது சாதாரணமான உபாதை. இதை ஒருபோதும் அலட்சியம் செய்யக்கூடாது.





கேசம் உதிருதல்

உங்கள் ரோமம் உதிருகிறது, ஏனெனில், ரோமக்கால்களுக்குப் போதிய ஊட்டம் இல்லாததுதான்.

**இளமையில் வழுக்கை**

இந்நிலையை நீங்கள் அநேகமாகத் தவிர்த்திருக்கக்கூடும்.

பொடுகு, ரோமம் உதிருதல் மற்றும் கேசம் குறைதல் முதலிய உபாதைகளால் நீங்கள் சிரமப்பட்டால் இன்றே ப்யூர் சில்விக்ரீன் உபயோகிக்கத் தொடங்குங்கள். ப்யூர் சில்விக்ரீனில் உங்கள் ரோமத்தின் வளர்ச்சிக்குத் தேவையான எல்லா பதினெட்டு 'அமினோ ஆஸிட்'களும் தீவிரமான வகையிலிருக்கின்றன. தலையில் நன்ருக அழுத்தித் தேய்ப்பதன் மூலம் ப்யூர் சில்விக்ரீன் ரோமக்கால்களில் புகுந்து அவைகளுக்குத் தேவையான இயற்கையான ஊட்டத்தையளித்து, கேசத்தை மறுபடியும் ஆரோக்கியமாக இருக்கச் செய்கிறது.

'ஆல் எபௌட் ஹெயர்' (All About Hair) என்ற, படங்கள் கொண்ட, இலவசப் புத்தகத்தை நீங்கள் பெற விரும்பினுல் தயவுசெய்து கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதவும்: டிபார்ட்மென்ட் K-1 சில்விக்ரீன் அட்வைஸரி சர்வீஸ் தபால் பை 10022. பம்பாய்-1

## ப்யூர் சில்விக்ரீன்




கேசம் சம்பந்தமான உபாதைகளுக்குக் குணமளிக்கும் ஓர் மிகத் தீவிரமான தயாரிப்பு. ஒரு மாத கால வைத்தியத்துக்குப் போதுமானது.

## சில்விக்ரீன் ஹேர் டிரெஸிங்

உங்கள் கேசத்தை நாள் பூராவுக்கும் நன்கு சீவியபடி வைக்கிறது. பொடுகு ஏற்படாமல் தடுப்பதற்குப் போதுமான ப்யூர் சில்விக்ரீன் கலந்துள்ளது.



# Silvikrin

சில்விக்ரீன் – கேச ஆரோக்கியத்துக்கான வழி

SP/1/P/6/65

அனந்தராம பிள்ளையை உங்களுக்குத் தெரிந்திருக்கும். ஜட்ஜ் வேலை, அவருடைய மூளைக்கு ஏற்றதாக இல்லை யென்றாலும், என்ன செய்வது? எத்தனையோ பெரிசின் பேரில் கிடைத்த வேலை அது. அந்தக் காலத்தில் அவருடைய தந்தை, மேன்மை தங்கிய பிரிட்டிஷ் ஆட்சியாளரின் அந்தரங்க அபிமானத்தைப் பெற்ற ஜஸ்டிஸ் கட்சிக் காரர்! அந்த ஒரே காரணத்துக்காகக் கருணை பொருந்திய பிரிட்டிஷ் சர்க்கார் அனந்தராம பிள்ளையை ஜட்ஜ் பதவியில் நியமித்து விட்டது. பூர்வ புண்ணிய கருமத்தால் கிடைத்த மூளைக்கும், ஜட்ஜ் பதவிக்கும் பொருத்தம் இல்லை யென்றாலும், அரசாங்கத்தின் அபிமானி என்ற காரணத்தால் அந்தப் பதவி, அவரை ஒட்டிக் கொண்டிருந்தது.

உண்மையில், நம் அனந்தராம பிள்ளைக்கு நீதிபதி பதவியைவிட, எங்காவது சங்கீத சபாக்களிலோ, தமிழ் இலக்கிய மேடைகளிலோ சங்கீதத்தையும், தமிழையும் பற்றி விமரிசனம் செய்யத்தான் ஆசை. அந்த ஆசையைப் புரிந்து கொண்ட பல பிரமுகர்கள் அவரைச் சங்கீத சதஸ்களில், தலைமை வகிக்க வைத்ததும் உண்டு. அப்படித்தான் ஒரு சமயம், ஒரு பிரபல வித்துவான் பாடியதைப் பற்றி மேடையில் அவர் விமரிசனம் செய்து புகழ்ந்தபோது, கூட்டத்தில் பலத்த சிரிப்புக் கிளம்பியது. தம்முடைய பேச்சின் ரசனை அப்படி என்று எண்ணிக் கொண்டார். கூட்டம் முடிந்த பிறகு விசாரித்த போதுதான் உண்மை விளங்கிற்று. பாகவதர் பாடிய காம்போதி ராக பல்லவியை சங்கராபரணம் என்று நினைத்துக் கொண்டு மேடையில் பிரமாதமாக விளாசித் தள்ளி விட்டார், அனந்தராம பிள்ளை! அதனாலென்ன? அந்த இரண்டு ராகங்களும் நெருங்கிய ராகங்கள்தானே... மேலும், ஜஸ்டிஸ் அனந்தராமபிள்ளைக்கு இந்தச் சலுகைகூடக் கிடையாதா என்ன?

அனந்தராம பிள்ளையிடம் கேட்டால், சங்கீதத்தை விடத் தமக்குத் தமிழில்தான் பாண்டித்தியம் அதிகமென்பார். அதற்குக் காரணம் உண்டு. அவருடைய தாத்தா, அந்தக் காலத்திலேயே வசன நடையில் ஏதோ எழுதினாராம். அவருக்குச் சிலை வைக்க வேண்டும் என்ற ஆசையும் அனந்தராமபிள்ளைக்கு உண்டு. அவருடையஆசையை நிறைவேற்றி வைக்கவும் பலர் தயாராயிருந்தனர். ஆனால், அவர்களுக்கு அந்தத் தாத்தா எந்தத் துறையில் நிபுணர் என்பதுதான் இன்னும் விளங்கவில்லை.

ஒரு நாள், நீதி மன்றத்தில் அனந்தராம பிள்ளையிடம் ஒரு வழக்கறிஞர் பிரமாதமாக வாதம் செய்து கொண்டிருந்தார். பிள்ளைவாளுக்கு வழக்கும் புரியவில்லை, வழக்கறிஞரின் வாதமும் புரியவில்லை. இதனால் மூளைக்கும் வேலை யில்லாமல் போய்விடவே, தூக்கம் வந்தது. பெரிய கொட்டாவி ஒன்றை விட்டு விட்டுக் கண்களைக் கசக்கிக் கொண்டார். இதைக் கண்ட வழக்கறிஞர், நீதிபதியின் தூக்கத்தைக் கலைக்க ஒரு யுக்தியைக் கையாண்டார்.



ஜஸ்டிஸ் அனந்தராமபிள்ளை எழுதிய ஒரு நாவலைப் பற்றிச் சொல்லி, அதில் வரும் கதாநாயகனைப் புகழ்ந்து, எழுதிய ஆசிரியரையும் வானளாவ உயர்த்தி, அதைப் பிரசுரித்த அப்பாவி பிரசுரகர்த்தருக்கும் ஒரு நன்றியைச் சொல்லி விட்டு, வாதத்தை முடித்தார். ஜஸ்டிஸ் பிள்ளைவாளுக்கு உச்சி குளிர்ந்து விட்டது. அந்தக் குளிர்ச்சியில் தம் நாவலுக்கும் அந்த வழக்குக்கும் என்ன சம்பந்தம் என்பதை ஆராய முடியவில்லை.

இன்று அவருக்கு ஒரே உற்சாகம்! மாலையில் அவருடைய புத்தகம் ஒன்றுக்குப் பிரமாதமான வெளியீட்டு விழா நடக்கிறது. அதற்கு மந்திரிகள் வருவார்கள். அறிவாளிகளும் வருவார்கள். அடேயப்பா, எவ்வளவு சிரமப்பட்டு அந்த வெளியீட்டு விழாவுக்கு ஏற்பாடு செய்திருக்கிறார்! அவருடைய நாவலைப் படித்த பிரசுரகர்த்தாக்கள் செய்வதறியாமல் திகைத்தார்கள். ஜட்ஜ் எழுதிய கதையாயிற்றே; மறுக்கவும் முடியவில்லை, ஏற்கவும் முடியவில்லை. கடைசியில், அதைத் தாமே அச்சிட்டு வெளியிட்டார், அனந்தராம பிள்ளை. அதனுடைய வெளியீட்டு விழா தான் இன்று மாலை நடக்கப் போகிறது.

இதற்குமுன் ஒரு நாவல் எழுதியிருந்தார். தமிழ் நாட்டில் அதை யாரும் அச்சிட முன் வராமல் போகவே, வேறு எங்கோ உள்ள ஒரு பதிப்பகத்தாரின் தலையில் அதைக் கட்டி விட்டார். இவருடைய புத்தகம் அடுத்த மாகாணத்தில் பிரசுரம் ஆகி இருக்கிறது என்பதில், ஒரு மதிப்பும் விளம்பரமும் அவருக்குக் கிடைத்து விட்டன! அந்த நாவலைப் பற்றி ஒரு சமயம் ஓர் இளைஞன் சொன்னது இன்னும் அவர் மனத்தில் முள் மாதிரி குத்திக் கொண்டிருந்தது.

நீதி இலாக்காவுக்கு வேலைக்கு ஆள் எடுக்கும் தேர்வுக் குழுவில் அனந்தராமபிள்ளை தலைவராக இருந்து இண்டர்வியூ நடத்திக் கொண்டிருந்தபோதுதான் ஓர் இளைஞன் அவருடைய நாவலைப் பற்றிய உண்மையைச் சொல்லி விட்டான். வேலைக்கு விண்ணப்பம் செய்திருந்த அந்த இளைஞன் எழுத்தாளனாகவும் இருக்கவே, கேள்வி கேட்டே அவனை மடக்க நினைத்தார் அனந்தராமபிள்ளை.

''உன்னுடைய விண்ணப்பத்தில் நீ ஓர் எழுத்தாளன் என்று சொல்லியிருக்கிறாயே; அதற்கும் நீதி இலாக்காவுக்கும் என்னப்பா சம்பந்தம்?''

''உங்களுக்கும் நீதி இலாக்காவுக்கும் இருக்கும் சம்பந்தந்தான்'' என்றான், அந்த இளைஞன். அனந்தராமபிள்ளை பிரள பிரள விழித்தார். பையன் இடக்காகப் பேசுவதாக நினைத்துக் கோபம் கொண்டார்.

''ஓகோ, நானும் எழுத்தாளர் என்பதைச் சொல்லுகிறாயா?'' என்று கூறிச் சிரித்து நிலைமையைச் சமாளித்தார் பிள்ளை.

''ஆமாம்'' என்று தலையை அசைத்தான், இளைஞன்.

''என்னுடைய நாவலைப் படித்திருக்கிறாயா?'' என்று கேட்டார் பிள்ளை.

''படித்திருக்கிறேன்.''

''எப்போது படித்தாய்?''

''நேற்றுத்தான்.''

''நேற்று....!''

''ஆமாம்...... தேர்வுக் குழுவில் நீங்களும் இருக்கிறீர்கள் என்று நேற்றுத்தான் எனக்குத் தெரிந்தது'' என்றான் இளைஞன். அனந்தராமபிள்ளைக்குச் சுருக்கென்று தைத்தது.

''கதையை முழுவதும் படித்திருக்கிறாயா?''

''ஓ.....''

''கதை எப்படி?''

''கஷ்டப்பட்டு எழுதின கதை மாதிரி இருக்கிறது.''

''ஆமாம், ஆமாம்.... கதை எழுதுவதென்றால் சும்மாவா? சிரமமான காரியந்தான். கதையின் போக்கு எப்படி?''

''ஆரம்பத்திலும் நடுவிலும் கொஞ்சம் மாற்றியிருந்தால் கதை பிரமாதமாயிருக்கும்.''

''முடிவு எப்படி?''

''அதைக்கூட மாற்றியிருக்கலாம். இன்னும் எடுப்பாக இருக்கும்.''

''கதாநாயகனைக் கொஞ்சம் தடபுடலாக்கி விட்டேன் இல்லையா?''

''ஆமாம்...... அவன் அசடு மாதிரி வந்து பிரமாதப்படுத்துகிறான்!'' என்றான் இளைஞன்.

''அசடா....? அவனைப் பெரிய அறிவாளி மாதிரியல்லவா சித்திரித்திருக்கிறேன்?'' என்றார் அனந்தராமபிள்ளை. அவர் முகத்தில் அசடு வழிந்தது.

''ஓகோ.... அறிவாளியாகவா? ஆனால், கதையில் அசடு மாதிரியல்லவா வருகிறான்?'' என்றான் இளைஞன் சந்தேகத்துடன்.

அனந்தராமபிள்ளைக்குத் தர்மசங்கடமாகி விட்டது. ஓரக் கண்ணால் பக்கத்திலிருந்த மற்ற அங்கத்தினர்களைப் பார்த்தார். அவர்கள் வாய்க்குள்ளேயே சிரிப்பது தெரிந்தது. அனந்தராம பிள்ளைக்குக் கோபம் வந்து விட்டது. இருந்தாலும் அடக்கிக் கொண்டு, ''நீ எழுத்தாளனாச்சே, உனக்கு இந்த வேலை ஒத்து வராதே. உன் கவனமெல்லாம் எழுத்திலேதான் செல்லும். வேலை ஒழுங்காக நடக்காது'' என்றார்.

''அப்படியெல்லாம் இல்லை, சார். நீங்கள் வேலை தந்தால் ஒழுங்காகப் பார்ப்பேன். நீங்கள் எழுதிக் கொண்டே வேலையையும் பார்க்கவில்லையா?'' என்றான் இளைஞன்.

''சரி, நீ போகலாம்.'' — சட்டென்று கூறி அவனை அனுப்பினார், அனந்தராம பிள்ளை.

அந்தச் சம்பவத்தை நினைத்துப் பொருமிக் கொண்டிருந்த போது, புத்தக வெளியீட்டு விழாக் குழுவின் காரியதரிசி வந்து சேர்ந்தார்.

''வாருங்கள்.... வாருங்கள்! எப்படியிருக்கிறது ஏற்பாடெல்லாம்?'' — அனந்தராமபிள்ளை உற்சாகத்துடன் விசாரித்தார்.

''எல்லாம் பிரமாதமாக முடிந்து விட்டது. எல்லா மந்திரிகளும் வரச் சம்மதித்து விட்டார்கள். புத்தகத்தைப் பற்றிக் கடைசியில் இரண்டொரு வார்த்தைகள்தான் சொல்ல வேண்டியிருக்கும். உங்கள் அபிப்பிராயத்தைக் கேட்டுக் கொண்டு.....''

''அந்தக் கவலையே உங்களுக்கு வேண்டாம். நீங்கள் என்ன பேச வேண்டுமோ அதை நானே எழுதி வைத்து விட்டேன்'' என்று கூறிக் கொண்டே ஒரு தாளைக் காரியதரிசியிடம் நீட்டினார் அனந்தராமபிள்ளை.

''பேஷ்...பேஷ்...பிரமாத வேலை செய்து விட்டீர்களே! புத்தகத்தை முன்பே படித்து விட்டேன். இருந்தாலும், என்ன பேசுவதென்று புரியாமல் குழம்பினேன் ஹி.... ஹி.....'' என்று பல்லை இளித்துச் சிரிப்பை உதிர்த்து விட்டுச் சென்றார் காரியதரிசி.

மத்தியானம் சாப்பாட்டுக்குப் பிறகு தம் பெருமையையும், எழுத்துத் திறமையையும் எண்ணிச் சாய்வு நாற்காலியில் கிடந்தார் அனந்தராம பிள்ளை. அப்போது இரண்டு முரடர்கள் அவர் பக்கத்தில் வந்து நின்றார்கள்.

''யாரப்பா நீங்கள்? என்ன வேண்டும்?''

''நாங்கள் எமதூதர்கள். உங்களை அழைத்துப் போக வந்தோம்.''

''ஐயய்யோ, என்னைக் கூட்டிக் கொண்டு போகவா? நான் பெரிய எழுத்தாளனாயிற்றே. நான் இல்லையென்றால் தமிழ் நாட்டுக்கு எவ்வளவு நஷ்டம் தெரியுமா? சாயங்காலம் வெளியீட்டு விழா வேறு இருக்கிறதே''. என்று அங்கலாய்த்தார் அனந்தராம பிள்ளை.

''வீண் பேச்சு வேண்டாம். புறப்படுங்கள் சீக்கிரம்'' என்று துரிதப்படுத்திய எம தூதர்களைத் தொடர்ந்து சென்றார் பிள்ளை.

எமலோகத்துக்குள் நுழைந்த போது, எமதர்மன் பாவிகளுக்குத் தண்டனை விதித்துக் கொண்டிருந்தான்.

''இவன் மகாபாவி. இவன் செய்த கொலைகளுக்கு அளவில்லை'' என்று ஒருவனை எமதர்மனின் முன்பு நிறுத்தினான் தூதன்.

''கொதிக்கும் எண்ணெயில் தள்ளு'' என்று கட்டளையிட்டான் எமதர்மன்.

''தள்ளிப் பார்த்து விட்டேன், பிரபு. அதற்கெல்லாம் இவன் அசையவில்லை'' என்றான் எமதூதன்.

எமதர்மன் சிறிது நேரம் யோசித்தான். பிறகு, பக்கத்தில் நின்ற சித்திரபுத்திரனிடம் யோசனை கேட்டான்.

''பிரபு, மகாபாவிகளுக்கென்று நாம் புதிதாகக் கண்டுபிடித்த கொடிய தண்டனையை இவனுக்கு அளித்துவிட வேண்டியதுதான்'' என்றான் சித்திரபுத்திரன்.

இதைக் கேட்டதும், எமதர்மனின் முகம் பிரகாசமடைந்தது.

''ஏ, மாபாவி! உனக்குக் கொடிய தண்டனை அளிக்கிறேன். இதோ, இந்தப் புத்தகத்தை முதலிலிருந்து கடைசி வரை நீ படித்து முடிக்க வேண்டும்'' என்று கூறித் தன் பக்கத்தில் அடுக்கி வைத்திருந்த புத்தகக்



கட்டிலிருந்து ஒருபுத்தகத்தை எடுத்து எதிரே நின்ற மனிதனிடம் வீசினான் எமன்.

புத்தகத்தை எடுத்துப் புரட்டிப் பார்த்த அந்த மனிதன் பயந்து நடுங்கினான். ''வேறு எந்தத் தண்டனை வேண்டுமானாலும் கொடுங்கள். இது மட்டும் வேண்டாம்'' என்று கதறினான். ஆனால் எமதூதர்கள் அவனை இழுத்துப் போய்விட்டனர்.

சற்றுத் தூரத்தில் நின்று இதைக் கவனித்துக் கொண்டிருந்தஅனந்தராமபிள்ளைக்கு வியப்பாயிருந்தது. இப்படிப் பயந்து நடுங்கும்படி அந்தப் புத்தகத்தில் அப்படி என்னதான் இருக்கிறது என்பதை அறியத் துடித்தார்.

''இந்தப் புத்தகங்களை யெல்லாம் நரகத்திலிருக்கும் கொடிய பாவிகளிடம் கொடுத்துப் படிக்கச் சொல்லுங்கள்'' என்று கட்டளையிட்டான் எமதர்மன். எமதூதர்கள், அங்கு அடுக்கி வைக்கப்பட்டிருந்த புத்தகங்கள் பலவற்றை எடுத்துக் கொண்டு, நரகத்தை நோக்கிச் சென்றார்கள். கொஞ்ச நேரத்துக்குப் பிறகு, நரகம் இருந்த திசையிலிருந்து கூச்சலும் அலறலும் கேட்டன.

இந்தச் சமயத்தில், ஜஸ்டிஸ் அனந்தராம பிள்ளையை எமதர்மனின் முன்னால் நிறுத்தினார்கள், எமதூதர்கள்.

''யார் இவர்?''—எமதர்மன் கேட்டான்.

''இவர்தான் ஜட்ஜ் அனந்தராமபிள்ளை.''

''என்ன பாவம் செய்தார்?''

''தமிழைக் கொலை செய்தார், சங்கீதத்தைச் சித்திரவதை செய்தார்.''

''மகாபாவியாயிற்றே. இவருக்கும் இந்தக் கொடிய தண்டனையைக் கொடுக்க வேண்டியதுதான்'' என்று கூறி, பக்கத்திலிருந்த புத்தகத்தைக் கையில் எடுத்தான் எமதர்மன். அப்போது சித்ரபுத்திரன்,பரபரப்புடன் குறுக்கிட்டு, ''பிரபோ, சற்று நிதானித்து யோசிக்க வேண்டும்'' என்றான்.

''இதைவிடக் கொடிய தண்டனை நரகத்தில் வேறு இல்லையே. தமிழையும் இசையையும் கொலை செய்த பாவிக்கு இதுதான் தண்டனை'' என்று கர்ஜித்தான் எமதர்மன்.

''இல்லை...... எதற்காகச் சொல்ல வந்தேனென்றால்..... இந்தப் புத்தகத்தை எழுதியவரே இவர்தான்!''

''ஆ...!'' — எமதர்மன் அதிர்ச்சி அடைந்தான். பின்னர், ''அப்படியானால் இவன் எழுதிய இந்தப் புத்தகங்களை இவன் ஒரு தடவை படித்தால் போதாது! ஒவ்வொன்றையும் எட்டுத் தடவை படிக்க வையுங்கள்!'' என்று கோபத்துடன் கட்டளையிட்டான் எமன்.

திடுக்கிட்டு விழித்தார் அனந்தராம பிள்ளை. நல்ல வேளை! புத்தக வெளியீட்டு விழாக் குழுவின் காரியதரிசிதான் நின்று கொண்டிருந்தார்.

# நம்பிக்கைக்கு உகந்த, தரத்தில் உயர்ந்த மோட்டார் உறுப்புகள்

டிவிஎஸ் வினியோகிக்கும் மோட்டார் உறுப்புகள் பரிசீலனை செய்யப் பெற்று, தேர்ந்த பிறகுதான் விற்கப்படுபவை. இந்த உண்மையை பஸ், லாரி, கார் சொந்தக்காரர்கள் நன்கு அறிவர். ஆகையால்தான் டிவிஎஸ் வினியோகிக்கும் உறுப்புகளையே அனைவரும் வாங்குகிறார்கள்.

## டிவிஎஸ் வினியோகிக்கும் நம்பகமான இதர மோட்டார் உறுப்புகள்:

| | | | |
|---|---|---|---|
| | | | **Standard** Battery<br>ஸ்டாண்டர்டு பேட்டரி |
| <br>Springs and Leaves<br>கானரா ஸ்பிரிங்குகள், லீவுகள் | **BORG & BECK** Clutch & Spares<br>போர்க் & பெக் கிளட்ச், ஸ்பேர்கள் | **MICO** Fuel Injection Parts<br>மைக்கோ பியூயல் இன்ஜெக்ஷன் பார்ட்டுகள் | <br>டபிள் [illegible] பிரஸிஷன் பார்ட்டுகள் |
| <br>Tie Rod Ends<br>QHR<br>டை ராடு எண்டுகள் | <br>ட்ரான்கோ வால்வுகள் | <br>Horns<br>ஹெல்லா ஹாரன்கள் | **BOLON** Timing Chains<br>போலான் டைமிங் செயின்கள் |
| <br>KAP<br>ஆட்டோ பார்ட்டுகள் | **Fenner** Fan Belts<br>பென்னர் பான் பெல்டுகள் | <br>Filter Elements<br>ஃப்ரிட்ஸ் பில்டர் எலிமெண்டுகள் | <br>Bulbs<br>அல்லைட் பல்புகள் |

**டி. வி. சுந்தரம் அய்யங்கார் & ஸன்ஸ் பிரைவேட் லிமிடெட்**
மதுரை-திருச்சி-திருநெல்வேலி-புதுக்கோட்டை-சேலம்-கோயமுத்தூர்-திருவனந்தபுரம்



**சுந்தரம் மோட்டார்ஸ் பிரைவேட் லிமிடெட்.**
மதராஸ்-பெங்களூர் செகந்திராபாத் (டெக்கான்)

**மதராஸ் ஆட்டோ சர்வீஸ் பிரைவேட் லிமிடெட்,**
மதராஸ்-பெங்களூர்

ராவ்பகதூர் சென்னகேசவலு வடக்கே ஒரு சிறிய சமஸ்தானத்தின் திவானாக இருந்து, தமது திறமையினாலும் உழைப்பாலும் புகழ் பெற்று, எழுபது வயதுக்கு மேல் பிறந்த ஊருக்குத் திரும்பியதும், தமது பெயரையும் புகழையும் நிரந்தரமாக்கும் நோக்கத்துடன் 'சென்ன கேசவ பவன'த்தைக் கட்டினார். அரண்மனை போன்ற தோற்றமும் ராஜரீகமும் கட்டியம் கூறிய அந்த பவனத்தைச் சுற்றி ஆறு ஏக்கர் தோட்டம். தோட்டத்தில் விளையாத பழ வகை இல்லை எனலாம். ராவ்பகதூரைப் பேட்டி காண்பதே அபூர்வம். பவனத்தில் பெண்பாலோர் 'பர்தா' முறையைப் பின்



# சூறாவளி

## ஏ.எஸ்.ராகவன்

பற்றத் தொடங்கி விட்டது போல, திரை மறைவிலேயேதான் இருப்பார்கள்.

ஆனால் இப்போது காலம் மாறி விட்டது. சென்னகேசவலுவின் பேரன் பட்டத்துக்கு வந்த பிறகு வடக்கத்திய சமஸ்தானச் சாயல் அகன்று மேற்கத்திய நாகரிக வேகம் பவனத்தில் ஆட்சி செலுத்தத் தொடங்கிவிட்டது. தாத்தாவின் பெயரைப் பூண்ட இளவரசு லண்டனில் இரண்டு ஆண்டுகள் இருந்தவர். சென்னகேசவலு ஜூனியர் என்று அழைக்கப்படுகிறார்.

பவனத்தின் அமைப்பிலேயே சில மாறுதல்கள் செய்தார் ஜூனியர். மேல் மாடியில் இருபுறமும் இரண்டு யானைகள் நின்ற இடத்தில் இப்போது புகைப்போக்கிகள் போன்ற ஸ்தூபிகளே நிற்கின்றன. சமஸ்தானத்து ஒட்டகம் கட்டப்பட்டிருந்த இடத்தில் இப்போது பளபளக்கும் ''கிங்ஸ் வே'' கார் நிற்கிறது. இரண்டு பட்லர்கள் சமையற்கட்டில் பணி புரிகிறார்கள். நாக்கை முழுக்க வெளியே நீட்டி உறுமிக் கொண்டே இளைப்பாறும் 'ராஜ்' என்னும் ஸ்காட்லாந்து 'டெரியர்' பவனத்தின் முன் வாயிலில் காவல் புரிகிறது. தோட்டத்தில் டென்னிஸ் மைதானமும், செயற்கைக் குளமும் முளைத்தன. ரவிவர்மாவின் சித்திரங்கள் கழற்றப்பட்டு விட்டன. அந்த இடங்களில் நவீனக் கலை ஓவியங்கள் காட்சி தருகின்றன.

காலை ஒன்பது மணிக்கு முன்னதாக ஜூனியர் படுக்கையை விட்டு எழுந்திருக்க மாட்டார். கண் மலரும் வேளையில் தயாராகக் காப்பிக் கோப்பை கட்டிலின் அருகே காட்சி தர வேண்டும். அவர் வீசி எறியும் பிஸ்கோத்தைத் தாவிப் பிடிக்க டெரியர் காத்திருக்க வேண்டும். இந்த நாயை அவர் லண்டனிலிருந்தே வாங்கி வந்தார். ராஜுடன் ரோஸி என்ற பெண் நாயும் இருந்தது. அண்மையில் அதற்கு ஏதோ நோய் தொற்றிக் கொள்ளவே ஜூனியர் கருணையுடன் அதைச் சுட்டுத் தள்ளி விட்டார். உயிர்க் கொலையும் ஒரு வகையில் ஜீவகாருண்யம்தான் என்பது அவருடைய கருத்து.

பவனத்தின் நடுக் கூடத்திலிருந்த ஸ்விஸ் கடிகாரம் ஒன்பது மணி அடிக்கவும், அதைத் தொடர்ந்து மேல் மாடிக் கடிகாரமும் அலறிப் புடைத்துக் கொண்டு ஒலித்தது. ஜூனியர் கண் விழித்தார். டெரியர் மாடிப் படிகளில் தாவி ஏறி வந்து அவரது அறைக்குள் தலையை, அதற்கும் முன்னதாக நாக்கை நீட்டியது.

''கம் ஆன், ராஜ்'' என்றார் ஜூனியர்.

ராஜ் கம்பீரமாக நடந்து அவர் அருகில் சென்றது. தனது முன் கால்களை உயர்த்திக் கட்டிலின் விளிம்பைப் பற்றி நின்று தலையை அவர் மார்பருகே வைத்தது. ஜூனியர் ராஜின் தலையை வருடிச் செல்லமாக அதன் காதுகளைக் கிள்ளினார். வலது காதைக் கிள்ளும் போது ராஜ் சும்மா இருக்கும். இடது காதின் அருகே கைவரும்போதே குரைக்கும். இடக்காது, வலக் காது தெரிந்திருக்கிறதே. ராஜ் மிகவும் அறிவுள்ள நாய்தான். இந்தப் பக்கத்துச் சாதாரண குப்பை மேட்டு நாயா என்ன?

பட்லர் காப்பித் தட்டுடன் நுழைந்தான். ஜூனியரின் விழிகள் இலேசாகச் சிவந்தன. ''ஏன் லேட் இன்றைக்கு? நோ.... நோ.... எனக்கு இது பிடிக்காது..... நான் எழுந்திருக்கும் போது காப்பி ரெடியாக இருக்க வேண்டும். இந்த வீட்டுக்குள் தயவு செய்து இந்தியன் 'பங்சுவாலிட்டி'யைப் புகுத்தி விடாதீர்கள்..... கம் ஆன்... க்விக்......'' என்றார்.

பட்லர் குழைந்தான். ''மன்னிக்க வேண்டும் ஸார்..... என் கடிகாரம் ஐந்து நிமிடங்கள் ஸ்லோவாகப் போகிறது. மன்னிக்க வேண்டும் ஸார்!'' என்றான்.

''ஈஸ் இட்? அதை ஐந்து நிமிடங்கள் வேகமாக வைத்துக் கொள். இல்லாவிட்

டால் எஸ்டேட் மானேஜரிடம் சொல்லிப் புதுக் கடிகாரம் வாங்கிக் கொள்.... டிலே மட்டும் கூடாது.''

''எஸ், ஸார்.''

''நீ போகலாம்.''

காப்பியை உறிஞ்சியவாறே ஸ்காட் லாந்து டெரியரான ராஜுடன் சிறிது நேரம் கொஞ்சினார் ஜூனியர். பிஸ்கோத்தை எறிவது போல் பாவனை செய்தார். பிறகு, எறிந்தார். குறி தவறாமல் பிடித்தது ராஜ். அந்த நாயின் மீது அவருக்கு அளவுகடந்த அன்பு. வெறும் அன்பு மட்டுமல்ல, கவலை கூட. இதன் வம்சம் பாழாகாமல் இந்த பவனத்தின் புகழுக்கும் கேடு வராமல் ஏதேதோ பேசினார். புரிந்து கொண்டு அதுவும் தலையை ஆட்டிற்று. சாமான்ய நாயா, ஸ்காட்லாந்து டெரியர் அல்லவா ?

திடீரென்று கார் நின்று விட்டது. ஜூனியர் தலையைச் சொறிந்தவாறே இறங்கினார். சுற்றுமுற்றும் பார்த்தார். பிறகு காரின் முன் பக்கத்தில் இஞ்சின் கோளாறு ஏதாவது இருக்குமோ என்று ஆராய லானார். நெடுநேர ஆராய்ச்சிக்குப் பிறகு கோளாறு இன்னதென்று புரிந்தது.

பெட்ரோல் இல்லை !

ஜூனியருக்குக் கண் சிவந்து விட்டது. காருக்குப் பெட்ரோல் இருக்கிறதா இல்லையா என்பதைக் கண்காணிக்கும் வேலையைச்



ராஜுக்கு ரோஸி போன்ற இணை அமைய வேண்டுமே !

ஆயிற்று. ஜூனியர் புறப்பட்டு விட்டார். 'லிங்கன்' காரில் தமது எஸ்டேட்டைக் காலையில் ஒரு முறையும் மாலையில் ஒரு முறையும் பார்வையிடுவது அவர் வழக்கம். இந்த ஒரு நியதியில் மட்டும் தாத்தாவுக்கு அவர் பேரனாக விளங்கினார். ராவ்பகதூர் கடைப் பிடித்த முறை இது.

இயற்கை எழில் குலுங்கும் தோட்டங் களின் வரிசை இருபுறமும் கைகட்டி நின்றது.

தொலைவில் சிறு குன்று தெரிந்தது. வாய்க்கால் ஒன்று சலசலத்து ஓடிக் கொண் டிருந்தது. ஜூனியர் காரை ஓட்டிக்கொண்டு போனார். அவர் அருகில் முன் வரிசையில் ராஜ் உட்கார்ந்திருந்தது. அதனுடன் அவர் சோமு சரிவரச் செய்யாததால் அல்லவா இந்தக் கோளாறு வந்திருக்கிறது? ''சோமு, உன்னை டிஸ்மிஸ் செய்திருக்கிறேன்'' என்று கத்தினார். ராஜ் தலையை ஆட்டிற்று. ''அது தான் நியாயம்..... இந்த மாதிரிப் பொறுப் பில்லாத ஆட்கள் வேலையில் இருக்க அருகதை இல்லை'' என்று சொல்வது போலிருந்தது.

இப்போது என்ன செய்வது? பெட்ரோல் வேண்டுமே ! யார் கொண்டு வருவது?

ராஜ் எஜமானரைப் பார்த்துத் தலையை ஆட்டிற்று. காலால் நிலத்தைக் கிறியது. 'நான் இருக்கிறேன், ஸார்' என்று சொல் லாமற் சொல்லிற்று.

ஜூனியர் ஒரு காகிதத்தை எடுத்தார். ''பெட்ரோல் வேண்டும். உடனே கொண்டு

வருக'' என்று எழுதினார். ராஜு அந்தக் கடிதத்தைக் கவ்விக் கொண்டு பவனத்தை நோக்கி வேகமாக ஓடியது.

ஜூனியர் காருக்குள் அமர்ந்தார். ஒரு சிகரெட்டை எடுத்துப் பற்ற வைத்தார். அவர் புகைக்கும் சிகரெட்டுகள்கூட லண்டனிலிருந்து நேரே வருபவைதாம்.

சுற்றிலும் அழகு எல்லையின்றிப் பரந்து கிடந்தது. தொட்டி தொட்டியாக வயல்கள். அவற்றுக்குக் கரை கட்டிய தென்னைகளின் வரிசை பூமிக்குள்ளிருந்து வனம் வெடித்து எழுந்து ஆடுவது போல் இருந்தது. இதற்கு முன் அந்தப் பகுதியைச் சாவதானமாக அவர் பார்த்ததில்லை. இப்போது பார்த்த போது கார் நின்றதுகூட ஒரு வகையில் நன்மைக்கே என்று தோன்றியது.

வெளியே நிலைத்திருந்த ஜூனியரின் பார்வை தற்செயலாகக் காரின் முன்புறத்துப் பக்கவாட்டுக் கண்ணாடியில் படிந்தது. என்ன விந்தை! அந்தக் கண்ணாடிக்குள்ளும் அழகு எல்லையின்றித் ததும்பிக் கொண்டிருந்தது. ஒரு கணம் அவருக்கு மூச்சே நின்று விட்டாற் போலிருந்தது. கண்ணாடிக்குள் தெரிவது யார்? மெர்லின் மன்றோவா, அல்லது.........?

அவள் யாரோ! ஆனால் இத்தனை அழகை எங்கே கொள்ளையடித்துக் கொண்டு வந்தாளோ, தெரியவில்லை. பிரமையிலும் வியப்பிலும் விரிந்த அவளுடைய விழிகள் கொள்ளைக்கென்றே ஏற்பட்டவைதாம். சந்தேகமே இல்லை. ஜூனியர் காருக்குள் இருப்பதை அவள் பார்க்கவில்லை. பார்த்திருந்தால் காரைத் தொட்டுத் தொட்டுப் பார்ப்பாளா? வியப்பு மீதுறத் தனக்குத் தானே பேசிக் கொள்வாளா?

ஜூனியர் முன் கதவைத் திறந்தார். அந்த ஒலியைக் கேட்டதும் அவள் மருண்டு விட்டாள். பயத்தை மீறி நாணம் முகத்தைச் சிவப்பாக்கி விட்டது.

''கம் ஆன்.... பயப்படாதே... நீ யார்?'' என்று கேட்டார் ஜூனியர்.

அவள் பதில் சொல்ல வில்லை. அவரையே உற்றுப் பார்த்தாள். பிறகு தப்பி ஓடுவதற்கு வழி எங்கே இருக்கிறது என்று சுற்றுமுற்றும் பார்த்தாள்.

ஜூனியர் சிரித்தவாறே அவள் அருகில் வந்து, ''இதற்கு முன் நீ காரையே பார்த்ததில்லையா?'' என்று கேட்டார்.

அவள் ஒன்றும் சொல்லாமல் மெல்ல நகரமுற்பட்டாள்.

''இதோ, பார், ஏன் பேசாமல் இருக்கிறாய்?..... உன் பெயர் என்ன? உனக்குப் பயமாக இருந்தால் நான் போய் விடுகிறேன். சாவதானமாகக் காரைப் பார்த்துக் கொள்.''

அவளுடைய முகத்தில் சற்றே நம்பிக்கையின் ரேகை படர்ந்தது. இதழ் மெல்ல விரிந்து இளநகை ஒன்றை உதிர்த்தது. ''பயமில்லை...... ஆனால்.....'' என்றாள்.

''ஆனாலென்ன?''

''ஒன்றுமில்லை..... இந்தக் கார் அழகாக இருக்கிறது.''

''நீயுந்தான் அழகாக இருக்கிறாய்!''

அவள் தலை பட்டென்று நிமிர்ந்தது. அவரைச் சுட்டுவிடுவது போலப் பார்த்தாள்.

''அடேயப்பா! இந்த அழகே பயமாகக் கூட இருக்கிறது எனக்கு!'' என்றார் ஜூனியர்.

அவள் சிரித்து விட்டாள்.

அவள் பெயர் ராணியாம். அதைவிடப் பொருத்தமான பெயர் வேறு இருக்க முடியாது என்று ஜூனியர் சொன்னார். அவள் ராணியேதான். வெறும் அழகால் மட்டுமல்ல, அவளிடம் ராணிக்கு வேண்டிய கம்பீரம் இருந்ததால். இந்தப் பக்கத்துக்கு இப்போதுதான் வந்திருக்கிறாளாம். அவளுடைய தாய் இறந்து போய் விட்டாளாம். தந்தையோடும், தம்பியோடும் இந்த ராணி பாரத தேசத்தைக் கால்நடையாகவே சுற்றி வருகிறாள். ஒரு காலத்தில் வாழ்ந்த குடும்பம் இப்பொழுது சீரழிந்து விட்டது. சுருங்கச் சொன்னால் அவர்கள் அகதிகள்!

''ராணி! உன் கதை மிகவும் சோகம் நிறைந்தது. இத்தனை அழகும் அறிவும் உள்ள நீ கஷ்டப்படலாமா?'' என்றார் ஜூனியர்.

ராணியின் நெஞ்சம் நெகிழ்ந்து போயிற்று. இந்த அன்பு வார்த்தைகளைக் கேட்டு. ஜூனியரை அவள் பார்த்த பார்வை ஒரு நெடிய எதிர்காலத்தை ஊடுருவது போல்தான் இருந்தது.

பெட்ரோலை எடுத்துக் கொண்டு சோமு வந்து கொண்டிருந்தான். அவனுக்கு முன்னதாக ராஜு ஓடி வந்தது. ராணி சரிவில் இறங்கி ஓடி விட்டாள். ராஜு விஷமச் சிரிப்புடன் தலையை இப்படியும் அப்படியும் ஆட்டி, 'அப்படியா சமாசாரம்?' என்று கேட்பது போல உறுமிற்று. ஜூனியர் அதன் வலது காதைக் கிள்ளினார். பிறகு சிரித்தார்.

அன்று பகல் உணவு கசந்தது ஜூனியருக்கு. தூக்கம் பிடிக்க வில்லை. சிகரெட்கூடக் கமறிற்று தொண்டையில். மாலை எப்போது வரும் என்று காத்திருந்து, வந்ததும் ராஜுவை அழைத்துக் கொண்டு புறப்பட்டுவிட்டார். சோமு கைகட்டி நின்று, 'பெட்ரோல் இருக்கிறது, ஸார்!' என்றான்.

''முட்டாள், உன்னை யார் பெட்ரோல் போடச் சொன்னது?'' என்று கோபித்தார் ஜூனியர்.

சோமு சிரித்தவாறே நகர்ந்தான்.

கார் பறந்தது. அதற்குள் வீற்றிருந்த ஜூனியர் பறந்தார். ராஜு நாக்கை நீட்டிக் கொண்டு இளைப்பாறிற்று.

அவர் எதிர்பார்த்தது போலவே ராணி நின்றுகொண்டிருந்தாள் அங்கே.

''ராணி!'' என்றார் அவர்.

அவள் தயங்கினாள்.

''நீ இருப்பாய் என்று எனக்குத் தெரியும்'' என்றார் அவர் உற்சாகத்துடன்.

அவள் நாணத்துடன் தலை குனிந்தாள்.

''காரில் உட்கார், ராணி...கொஞ்ச தூரம் நாம் போய் வருவோம்'' என்றார் அவர்.

ராஜு இந்தச் சம்பாஷணையைக் கேட்டதிலிருந்து ஒன்றைப் புரிந்து கொண்டது. இனி

முன்புறம் எஜமானரின் அருகில் அமரும் பாக்கியம் அதற்கு இல்லை என்பதை அது தெரிந்து கொண்டு விட்டதோ என்னவோ! ஒரு துள்ளுத் துள்ளிக் கீழே குதித்தது. பிறகு வெகு வேகமாகச் சரிவில் இறங்கி எங்கோ ஓடி விட்டது.

ஜூனியர் சிரித்தார். "மிகவும் அறிவுள்ள நாய் அது.... பார்த்தாயா! முன் சீட்டை உனக்குக் கொடுத்திருக்கிறது!" என்றார்.

ராணி உட்கார்ந்தாள். கார் பறந்தது. தரையில் எழில் குலுங்கும் தோப்புக்களிடையேயா அது ஓடிற்று? ஊஹூம்? எங்கோ வான வீதியில், எழில் மினுக்கும் தாரகைக் கூட்டங்களிடையே அது பறந்தது.

"இந்த ராஜை ஸ்காட்லாந்தில் வாங்கினேன். நல்ல டெரியர் வம்சத்துக் குட்டி... இதற்கு இணையாக ஒரு நாய் இருந்தது. ராணி.... வியாதியால் அது பட்ட துன்பத்தைக் கண்டு நானே சுட்டுக் கொன்று விட்டேன்."

ராணியின் விழிகள் பயத்தால் விரிந்தன. "சுட்டுக் கொன்றுவிட்டீர்களா?" என்றாள்.

"ஆமாம்... மேல் நாட்டில் அப்படித்தான் ராணி. இப்போது எனக்கு மிகவும் கவலையாக இருக்கிறது.... என் ராஜை இந்தப் பக்கத்துக் குப்பை மேட்டு நாய்களிடமிருந்து காப்பாற்றியாக வேண்டும்...." அவர் சிரித்தார். "சீக்கிரமே ஸ்காட்லாந்திலிருந்து ஒரு டெரியரை வரவழைத்தாக வேண்டும். ஏனென்றால் அந்த வம்சம் இருக்கிறதே, அது...." ஜூனியர் தம் போக்கில் பேசிக் கொண்டே போனார்.

ராணிக்கு முள்மீது அமர்ந்திருப்பது போலிருந்தது. ஜூனியர் தம்மை அறியாமல் ஒரு பெரிய உண்மையை அவளுக்கு விளக்கிவிட்டார். பரம்பரைக் காப்பு ஸ்காட்லாந்து டெரியருக்கு மட்டுமா அவசியம்? நாடோடியான அகதிப் பெண் ராணி, இவான் வம்சத்துப் பரம்பரையில் படர்வது இயலாது என்பதை ஜூனியர் தெளிவாகச் சொல்லி விடவில்லையா?

"தயவுசெய்து காரை நிறுத்துங்கள். நான் இறங்கிக் கொள்கிறேன்" என்றாள் அவள் திடீரென்று.

ஜூனியர் திகைத்துப் போய் அவளைப் பார்த்தார். அவளுடைய விழிகள் நனைந்திருந்தன.

"ராணி, என்ன இது?" என்று கேட்டார் பதறிப் போய்.

---

# இவர்தான் ராமையா!

**[பிரபல எழுத்தாளர் பி. எஸ். ராமையாவின் மணிவிழா மே 26ல் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. மணிவிழா மலரில் சி. சு. செல்லப்பா எழுதியுள்ள கட்டுரையிலிருந்து சில பகுதிகள்.]**

அந்தச் சிறுவன் சென்னை வந்தும் பிழைப்புக்கு வழி இல்லாததைக் கண்டு மறுபடியும் மதுரை திரும்புகையில், திருச்சியில் ஒரு ஜவுளிக்கடையில் துணி அளந்து கொடுத்தல், கணக்கு எழுதுதல் வேலை ஆறு மாதம்; பிறகு வடலூரில் 'போல்கேட்'டில் கணக்கு எழுதும் வேலை சுமார் மூன்று மாதம்; பிறகு கடலூரில் மணிலாக் கொட்டைக் கடையில் கணக்கு எழுதுதல்; ஐந்து ரூபாய் சம்பளத்தில் சில நாட்கள். பிறகு மீண்டும் சென்னைக்குத் திரும்பி விட்டான். ஒரு மோட்டார் கம்பெனியில் வேலை. பிறகு மாத்திரை செய்யும் ஓர் ஆயுர்வேத டாக்டரிடம் வேலை எட்டு மாதம். இதற்கெல்லாம் பிறகு 1923ல் ஆர்யபவன் ஹோட்டலில் ஒரு வருஷம் சர்வராக வேலை செய்தான்.

இந்தச் சமயத்தில்தான் அந்தப் பதினெட்டு வயது இளைஞனுக்கு உள்ளே உறைந்து கொண்டிருந்த எழுதுகிற உணர்வு வெளியிட்டு பெற்றது. 'கோமளா அல்லது கைலாசையரின் கெடுமதி' என்ற துப்பறியும் நாவலை எழுதினார் பி. எஸ். ராமையா.

ஹோட்டல் தொழிலில் ஏற்பட்ட ஒரு சிறு நிகழ்ச்சியால் இனி இந்த வேலையே செய்வதில்லை என்று முடிவு செய்து வேலையை விட்டு விட்டுச் சென்னையில் பதினேழு நாட்கள் சாப்பாட்டுக்குத் தவித்து அலைந்தார் அவர். பிறகு 'பக்கெட் ஷாப்' என்கிற குதிரைப் பந்தயச் சூதாட்டக் கடை ஒன்றில் வேலை செய்தார்.

1930ல் நாடெங்கும் பொங்கி எழுந்த சுதந்திர இயக்கம் அவர் உள்ளத்தைத் தொட்டது. ஓர் ஆவேசமாக நெஞ்சில் தேசிய வெறி ஏற்றியது. உப்பு சத்தியாக்கிரகத்தில் கலந்துகொள்ளச் சென்றார். போன அன்றைக்கே அவர் கைது செய்யப்பட்டார். சிறையை விட்டு வெளியே வரும்போது ராமையாவுக்கு ஒரு புதுப் பார்வை ஏற்பட்டிருந்தது. வாழ்க்கையைப் பற்றித் தாம் இதுவரை நினைத்து வந்திருப்பதெல்லாம் சரியல்ல என்று பட்டது. அவரே சொன்னதுபோல் அப்போதுதான் 'கண் திறந்தது' என்று சொல்லலாம். இந்தப் புது நோக்கு ஏற்பட்டதும் ராமையா கதரைத் தோளில் போட்டுக் கொண்டார். தோளில் கதரைப் போட்டுக்கொண்டு அவரும் ஸ்ரீபாதசங்கரும் ஊர் ஊராகச் சென்று கதர்ப் பிரசாரம், விற்பனை செய்து காந்திஜியின் நிர்மாணத் திட்ட வேலையில் ஈடுபட்டனர். இரண்டு மாதங்களுக்குப் பிறகு 1930 இறுதியில் சென்னையில் விதேசித் துணிக்கடை மறியல் தொடங்கப்பட்டது. தொண்டர் கம்ப் பிரித்து மறியலுக்குக் கோஷ்டி கோஷ்டியாக அனுப்பும் பொறுப்பு ராமையாவினுடையது. தொண்டர்களைப் போலீசார் அடித்து நொறுக்குவதைப் பார்த்த ராமையாவின் கண்களிலிருந்து கண்ணீர் பெருகும். கடற்கரையிலும், பார்த்தசாரதி கோயிலிலும் போய் உட்கார்ந்து கொண்டு கண்ணீர்விட்டு அழுவார். வேதாரண்யத்தில் அவருக்கும் அடி விழுந்தது தடியால். சென்னை மறியலிலும் அவருக்கு அடி விழுந்ததுண்டு.

"தயவுசெய்து நிறுத்துங்கள்...." என்றாள் ராணி அழுத்தமான குரலில்.

"ஏன்?"

"எனக்குப் பயமாக இருக்கிறது."

"நோ.... நோ.... எதற்குப் பயம்?"

"வேண்டாம். நான் அபலை. எங்கோ பிறந்தேன். எப்படி எப்படியோ அலைக்கழிக்கப்பட்டுவிட்டது எங்கள் குடும்பம். இப்போது இங்கே உட்கார்ந்திருக்கிறேன். நான் குப்பைமேட்டைச் சேர்ந்தவள். நீங்களோ?"

"ராணி?" ஜூனியர் கூவியேவிட்டார். தம் தவறு அவருக்குப் புரிந்தது.

இச்சமயம் பாதை எதிரே சற்றுத் தொலைவில் ராஜ் ஓடி வருவது தெரிந்தது. தம்மை நோக்கித்தான் அது வருவதாக ஜூனியர் நினைத்தார். ஆனால் ராஜ் காரை லட்சியம் செய்யாமல் மறுபடியும் வந்த திசையிலேயே ஓடிற்று. இப்போது சரிவிலிருந்து மற்றொரு நாய் ஓடி வந்தது அதன் அருகே. இரண்டும் இணைந்து சிறிது தூரம் ஓடின. பிறகு ஒன்றின் மீது ஒன்று தாவி விளையாடின. புரண்டன; அளைந்தன. பிறகு சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு இரண்டும் சரிவில் இறங்கி ஓடி விட்டன.

ராணி தலையை வெளியே நீட்டி, "ரோஸி! இங்கே வா. அது ஸ்காட்லாந்து டெரியர். அதோடு சேராதே" என்று கத்தினாள்.

அந்த ரோஸி ஒரு கணம் நின்று தன் எஜமானியை உற்றுப் பார்த்தது.

ஜூனியர் ராணியின் கையைப் பற்றினார். "வேண்டாம், ராணி... ஓர் உண்மை இப்போதுதான் எனக்கு விளங்கிற்று. ஸ்காட்லாந்து வர்க்கப் பெருமை பற்றி ராஜே கவலைப்படாதபோது நான் ஏன் கவலைப்பட வேண்டும்? தவிரவும் ஒரு சூறாவளி போல் ராஜைக் காதல் பற்றிக் கொண்டு விட்டது. அதைத் தடுக்க எனக்கு உரிமை இல்லை" என்றார். பிறகு சிரித்தவாறே, "ஒரு ரோஸியை வெளிநாட்டிலிருந்து வரவழைக்க வேண்டிய அவசியமில்லாமல் செய்துவிட்டாய் நீ... ராணி, என்மீது இன்னமும் கோபமா?" என்றார்.

"கோபம்தான்." ராணி செல்லமாகத் தலையை ஆட்டினாள். அடுத்த கணம் அவர் மார்பில் சாய்ந்து விம்மினாள்.

'சென்னகேசவ பவன'த்தில் ஒரு பெரிய காதல் புரட்சியை விளைவித்த பெருமை ராஜுக்கு உண்டு. என்ன இருந்தாலும் அது ஸ்காட்லாந்து டெரியர் இல்லையா?

---

பம்பாயில் தொடங்கிய ஹிந்துஸ்தான் சேவாதள் ஆபீஸர் பயிற்சி முகாமிற்குத் தமிழ்நாட்டிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட நான்கு பேர்களில் ஒருவராக ராமையா பம்பாய் சென்று பயிற்சி பெற்று ஜவாஹர்லால் நேரு கையெழுத்திட்டு மகாத்மா காந்தி கையால் சர்டிபிகேட் பெற்றுச் சென்னை திரும்பினார். 1931ல் திருநெல்வேலியில் இருக்கிறபோது தாமிரபரணி ஆற்றில் பெரிய வெள்ளம் வந்த சமயம். ஆற்றில் மைய மண்டபத்தில் தங்கியிருந்த சில பிச்சைக்காரர்கள் வெள்ளத்தில் அகப்பட்டுக் கொண்டனர். ராமையா நீந்திச் சென்று அவர்களைக் காப்பாற்றிய நிகழ்ச்சி அவர் வாழ்க்கையில் மறக்க முடியாத சம்பவம்.

1932ல் 'விதியின் விளையாட்டு' என்கிற சிறு நாவலை எழுதினார். இந்த நாவலை எழுதியதற்கு அவருக்கு முப்பத்தைந்து ரூபாய் கிடைத்தது.

மகாமகத்துக்குப் போகுமுன் சங்கு சுப்ரமண்யன் ராமையாவிடம் 'ஆனந்த விகடன்' சிறு கதைப் போட்டி வைத்திருப்பதைத் தெரிவித்து அதற்கு ஒரு கதை எழுதும்படி அவரைத் தூண்டினார். என்னவோ எழுதத் தோன்றியது. ராமையா ஒரே மூச்சில் ஒரு கதை எழுதி அனுப்பிவிட்டார். அதுதான் 'மலரும் மணமும்' கதை. அதை எழுதியவர் யார் என்ற பேர்கூட எழுதவில்லை அதில்!

நூறு ரூபாய்ப் பரிசு இந்தக் கதைக்குக் கிடைக்கவில்லைதான். ராஜியின் கதைக்குத்தான் கிடைத்தது. ஆனால் அதுவும் விகடன் பத்திரிகையில் பிரசுரிக்கப்பட்டு, பத்து ரூபாய் சன்மானம் கொண்டு வந்தது. கதையை வெளியிடு முன் 'ஆசிரியர் பெயரைத் தெரிவிக்கவும்' என்று விகடன் எழுதி இருந்தது. பிறகு கதை எழுதியது தாம் என்று அறிவித்து அந்தச் சன்மானத்தைப் பெற்றுக் கொண்டு வந்தார் ராமையா.

1933 செப்டம்பரில் வ. ரா., கே. சீனிவாசன், டி. எஸ். சொக்கலிங்கம் மூவரும் சேர்ந்து ஆரம்பித்த 'மணிக்கொடி' வாரப் பத்திரிகை வெளி வந்தது. முதல் இதழைப் படித்ததுமே அதன் தொனி ராமையாவைக் கவர்ந்து விட்டது. சீனிவாசன் ராமையாவை மணிக்கொடி ஆபீஸில் சேர்த்துக் கொண்டார். 1935 பிப்ரவரியில் மணிக்கொடியை நடத்த முடியாமல் கே. சீனிவாசன் நிறுத்த முடிவு செய்துவிட்டார். ராமையாவுக்கு மணிக்கொடி நிற்பது மனத்துக்கு நிம்மதி தரவில்லை. ராமையா கேட்டதின்பேரில் கே. சீனிவாசன் மணிக்கொடி பெயரை ராமையாவிடம் கொடுத்து விட்டார். ஓர் இருபத்திரெண்டரை ரூபாய் செக்கை வைத்துக் கொண்டு அதைக் காட்டி, பணம் கிடைக்கும், கிடைத்ததும் தருவதாகச் சொல்லி பிரஸ், பேப்பர்க்காரர், வீட்டுக்காரர் மூவருக்கும் நம்பிக்கை விழச் செய்து முதல் இதழைக் கொண்டு வந்தார். இந்தவிதமான வறுமையில் பிறந்த மணிக்கொடி வறுமையிலேயே தடுமாறி வளர்ந்து முடிவையும் அடைந்தது ஆச்சரியமில்லை. மணிக்கொடி இலக்கிய வளம் பெருக்கியது அதன் இதழுக்கு இதழ். ஆனால் ராமையாவால் அதன் பொருளாதார வளத்தைப் பெருக்க முடியவில்லை.

'தினமணி கதிர்' வாரப்பதிப்பில் வாரம் ஒரு கதை வீதம் ஒரு வருஷ காலத்துக்குமேல் சிறு கதைகள் விடாமல் தொடர்ந்து எழுதிய தனிப்பெருமை ராமையாவுக்குத்தான் உண்டு. ரசமான கதைகள் எழுதுவதில் அவருக்கு இணை யாரும் இல்லை. மேடு பள்ளங்களைத் தம் வாழ்க்கையில் தாராளமாக அனுபவித்திருந்ததன் விளைவாக ஏற்பட்ட அனுபவம் அவருக்கு நிறையக் கருத்துக்களை மட்டும் இல்லை; வாழ்க்கையைப் பற்றின ஒரு திட்டவட்டமான பார்வையையே கொடுத்துவிட்டது.

பெரிய குடும்பஸ்தரான ராமையாவுக்கு எப்பொழுதுமே சிரமமான நாட்கள்தான். ஆனால் ராமையா சிரமத்தை வெளியிட்டுச் சொல்வாரேயன்றி, சிரமத்தைப் பாராட்டி மனம் முறிந்து நிற்பவர் அல்ல. அவருக்கு அறுபது வயது நிரம்பிவிட்ட இந்த நாட்களிலும் அவரைப் பார்ப்பவர்கள் ஒரு வாலிபன்போல் உற்சாகத்துடனும் வேகத்துடனும் இருப்பதைப் பார்க்க முடியும்.

# ஸ்டாண்டர்ட் ஹெரால்ட்

## கார் சவாரியில் ஒரு புது அனுபவம்



### கீழ்க்கண்ட போற்றத்தக்க வசதிகளுடன் கூடியது

- 25 அடி வட்டத்திற்குள் திருப்ப முடியும்
- ஒவ்வொரு சக்கரத்திற்கும் தனித்தனி சஸ்பென்ஷன் (Suspension) இணைப்பு இருக்கிறது (சுலபமாக அபாயமின்றி திருப்பலாம். ரஸ்தாவில் நல்ல பிடிப்பு உண்டு. முன் சக்கரத்திற்கு ஏற்படும் அதிர்ச்சி முன் சக்கரத்தின் ஸ்ப்ரிங்கிலேயே தாங்கிக்கொள்ளப்படுவதால், வண்டியின் பின்புறம் அதிர்ச்சியோ, ஆட்டமோ அடையாது)
- எஃகு கர்டரினலான சாஸிஸ் (Chassis) (மிக உறுதியான கார் அமைப்பு)
- 93% வெளிப்பார்வை வசதி.

**STANDARD herald**

# ஸ்டாண்டர்ட் ஹெரால்ட்

**உறுதியான, *எழில் மிகுந்த* கார்**



*தயாரிப்பாளர்கள்,*

ஸ்டாண்டர்ட் மோட்டார் ப்ராடக்ட்ஸ் ஆப் இந்தியா லிமிடெட்
சென்னை-2

*விநியோகஸ்தர்கள்*

யூனியன் கம்பெனி (மோட்டார்ஸ்) பிரைவேட் லிமிடெட்
சென்னை உதகை

யுனிகான் (பெங்களூர்) பிரைவேட் லிமிடெட், பெங்களூர்

# விட்ட மொழை

'**ஊ**தாண்ட்' அவர்களின் உண்மையான வாழ்க்கைச் சரித்திரத்தைக் கல்கியில் படித்த பொழுது உழைப்பின் மேன்மையையும், ஊக்கமுடன் செயலாற்றுவதின் இன்மையையும், வாழ்வின் சிக்கல்களையும் நன்கறிய முடிந்தது.

அருப்புக்கோட்டை
7—5—65 **பெ. க. தியாகராசன்**

★

ஆதார சுருதியின் இழைப்புடன் ஊறித் தொடங்கும் ஜி. என். பி. அவர்களது ராக விஸ்தாரம் — மெருகேறிய கம்பீர நகாசாக, ஆரோகண அலைகள் உயர்ந்து உயர்ந்து, ரிஷப காந்தார, மத்திமப் படிகளிலே தவழ்ந்து விளையாடி, இமய நெடு மலை மேக மண்டலமாகிற மேல் பஞ்சமத்தை எட்டிப் பிடிக்கும். அங்கே—சிறிதும் காலப்பிரமாணம் பிழையாத அவரது கட்டுக் கொள்ளாப் பிர்க்கா ரவைகளின் பொழிவு கோடை மழையாக வர்ஷிக்கும். அங்கிருந்தோ — நாதவெள்ளம் அலை அலையாகத் தவழ்ந்திழைந்து வந்து ஆதாரசுருதியுடனே ஐக்கியமாகும். அவரது நாதோபாஸனையின் கவர்ச்சியில் கற்றோர் காமுற்றனர்; கலை கல்லாதார் கல்லாய்ச் சமைந்து அசந்தனர். பிரத்தியட்சக் காவியமேதையாகவும் சாதனை புரிந்து காட்டியவர், வித்துவான்களுள் ஸ்ரீ ஜி. என். பி. ஒருவரே! அவரது புலமை வெள்ளமாகிற அருட்கீர்த்தனைகள் வாழ்ந்து வாழ்ந்து முழங்கி, அவரைச் சிரஞ்சீவி, சிரஞ்சீவியென நம்முள் — நம் எதிர்காலத்தில் நிலவுவது ஒன்றைத்தான் நாம் இனி பெற முடியும்.

கும்பகோணம் **ஆர். கிருஷ்ணமூர்த்தி அய்யர்**
8—5—65 **கி. முத்துஸ்வாமி** (துரோணன்)

★

எங்கள் பிரதமர் திரு டட்லி சேனநாயகாவின் படத்தை முன்அட்டையில் வெளியிட்டு, எங்கள் பொதுத் தேர்தல் நடந்த முறையைப் பற்றியும் மிகவும் சிறப்பாக வெளியிட்டிருந்தீர்கள்.

பிரதமரையும், இந்நாட்டின் மக்களையும் கௌரவித்ததற்காக நாங்கள் எங்கள் இன, பந்துக்கள், சகாக்கள் சார்பாக எங்கள் நன்றியறிதலைக் கல்கி பத்திரிகைக்குத் தெரிவித்துக் கொள்கிறோம். தாங்கள் செய்துள்ள இந்தச் சிறந்த சேவையை வேறு எந்தப் பத்திரிகையும் செய்யவில்லை.

கொழும்பு **எஸ். கோமதிநாயகம்**
6—5—65 **எம். இஸ்மாயில்**

★

பாகிஸ்தான் எல்லைப் பகுதியைத் தாக்கியுள்ள இந்தச் சமயத்தில், படைவீரர்களை ஊக்கப்படுத்தி வைக்க வேண்டும். நம் நாட்டில் படை வீரர்களின் ஊதியம் மிகக் குறைவாகும்.

ஒரு சாதாரண மில் தொழிலாளிக்கு மாதம் 130 ரூபாய் சம்பளம். ஓவர்டைமுக்குத் தனி ஊதியம். வருடத்துக்கு இரண்டு மாத போனஸ். இன்னும் எத்தனையோ சலுகைகள். ஆனால் சாதாரண ஒரு ராணுவ வீரருக்குச் சம்பளம் நூறு அல்லது 110 ரூபாய். சாப்பாடு சர்க்கார் போடுகிறது. செலவுகள் போக ரூ. 80 மனைவி-மக்களுக்கு அனுப்பினால் இந்தச் சொற்பத் தொகையில், அதுவும் இந்தப் பஞ்ச காலத்தில் எப்படிச் சமாளிக்க முடியும்? அதுவும் நான்கைந்து குழந்தைகள் இருந்து விட்டாலோ சொல்லவே வேண்டாம், அந்தக் குடும்பம் படும் கஷ்டத்தை.

நாட்டுக்காக உயிரைக் கொடுக்கும் வீரர்களுக்கு அதிகம் கொடுக்க வேண்டாமா?

மாதக் கணக்கில் கணவனைப் பிரிந்து வாழும் சகோதரிகளுக்குக் கைநிறையப் பணமாவது வேண்டாமா?

புளியம்பட்டி
7—5—65 **ஒரு ராணுவ வீரரின் மனைவி**

★

## ❊ சிறந்த சேவை
## ❊ பாரபட்சமற்ற பஞ்சம்!
## ❊ ஸ்ரீதரின் தரம்!

சென்ற 2—5—65 கல்கி இதழில் வெளியாகியுள்ள 'வெண்ணிற ஆடை' சினிமா விமரிசனத்தின் நேர்மைக்காக என் பாராட்டுக்களைத் தங்களுக்குத் தெரியப்படுத்த விழைகிறேன்.

மனத் தத்துவ ரீதியில் நன்கு அமையப் பெற்ற ஒரு நல்ல சிறு கதையை மிகச் சிறந்த முறையில் படமாக ஆக்கியுள்ள திரு ஸ்ரீதர் அவர்கள் ஓர் உன்னத சேவையைப் பட உலகுக்குச் செய்துள்ளார்.

நடிகர்களான ஸ்ரீகாந்த், சுந்தரராஜன், சேஷாத்திரி, மூர்த்தி, மாலி யாவரும் 'ஏ ஒன்'னாகச் செய்திருக்கிறார்கள். குமாரி ஜெயலலிதாவின் பாகத்தை அவரை விடத் திறமையாக எந்த முதல் கிளாஸ் பிரபல நடிகையாலும் நடித்திருக்க முடியாது. தாங்கள் கூறுவது போலவே 'பர்ஸனாலிடி கல்ட்' நீங்குவதற்கு ஸ்ரீதரைப் போன்ற கலைஞர்களின் படத்தைப் பொதுமக்கள் அமோகமாக ஆதரித்துப் படவுலகின் தரம் உயர உதவ வேண்டும்.

ஒரு தரமான படத்தைத் தயார் செய்து வெளியிட்டதற்காக என்னுடைய மனப்பூர்வமான பாராட்டுதல்களை டைரக்டர் ஸ்ரீதருக்கு 'கல்கி'யின் மூலம் தெரியப்படுத்திக்கொள்ள விரும்புகிறேன்.

பெரம்பூர்,
29—4—65 **என். பாலசுப்பிரமண்யம்**




# கல்யாண மண்டபம்

"ஆச்சரியமாக இருக்கிறதே! இந்தத் திருநெல்வேலிச் சீமைக்கு நீங்கள் எங்கே வந்தீர்கள்?" என்று வசந்தன் விசாரித்தான்.

"அட, நீங்களா, நீங்களேதானா?" என்று மாதங்கி அவனைவிட ஆச்சரியத்துடன் கேட்டான்.

"ஆமாம், நானேதான். நான் இங்கே என் ஒன்றுவிட்ட மாமா வீட்டுக்கு வந்தேன்" என்று வசந்தன் தெரிவித்தான்.

"நான் இங்கே என் ஒன்றுவிட்ட சிநேகிதியின் அத்தை வீட்டுக்கு வந்தேன்" என்றான் மாதங்கி.

"இரண்டு பேரும் ஒன்றுவிட்ட உறவுக்காரர்கள் வீட்டுக்கே வந்திருக்கிறோம். இப்போது எல்லாம் ஒன்று விட்டதுதான் பாஷன் போலும்! அரிசிக்கும் மண்ணெண்ணெய்க்கும் நேரடியாக என்ன சம்பந்தம்? ஒன்றுமில்லை. இருந்தாலும் அரிசி ரேஷன் கார்டு வைத்திருப்பவர்களுக்கு ஒரு லிட்டர் மண்ணெண்ணெய் கொடுக்கிறார்கள். என் உறவுக்காரர்களுக்கு உதவி செய்வதற்காக நான் கியூவில் நிற்க வந்தேன்" என்றான் வசந்தன்.

"நானும் அதற்குத்தான் வந்தேன்!" என்று மாதங்கி சொன்னான்.

அவர்கள் இருவரும் திருநெல்வேலி நகரத்தில் ஒரு மண்ணெண்ணெய்க் கடை வாசலில் க்யூ வரிசைகளில் எதிரும் புதிருமாக நின்றிருந்தார்கள்.

"உங்களைக் கடைசியாகப் பார்த்து ரொம்ப நாளாயிற்று. பாபம், அந்த மனிதர் உயிருடன் இருக்கிறாரா?" என்று மாதங்கி கவலையுடன் விசாரித்தான்.

"எந்த மனிதர்?" என்று வசந்தன் கேட்டான்.

"உண்ணாவிரதமிருந்தாரே, அவர்தான்!" என்று மாதங்கி கூறினான்.

"ஓ! அந்தக் கதை, பாதியில் விட்டு விட்டேனே. அதைச் சொல்கிறீர்களா?" என்று அவன் கேட்டான்.

"ஆமாம்! கியூ வரிசையில் நாம் கடைசி கடைசியாகப் போய் நின்று கொள்ளலாம். கதையைச் சொல்லிக் கொண்டு வரச் சௌகரியமாயிருக்கும்" என்று மாதங்கி கூறியவண்ணம் வரிசை நடுவிலிருந்து கடைசியாகப் போய் நின்றான்.

வசந்தனும் அப்படியே செய்தான். பிறகு கதையைத் தொடங்கினான்:

"பாண்டியன் உண்ணாவிரதம் இருக்க ஆரம்பித்து ஐந்து தினங்களாகி விட்டன. அவர் இருபது நாட்கள் வரை உண்ணாவிரதமிருக்கப் போவதாகச் சொல்லிக் கொண்டார்கள். ஆனால் ஆறாவது நாள் அவர் தமது விரதத்தை நிறுத்தப் போவதாகத் தெரிவித்தார். ஆறாவது தினமன்று சில பத்திரிகை நிருபர்கள் வந்திருந்தார்கள். பாண்டியனின் மனைவி செந்தாமரை அம்மாள் ஒரு பிளாஸ்டிக் டம்ளரில் கொடுத்த ஆரஞ்சு ரஸத்தைத் தன் கணவனிடம் கொடுத்தாள். அதை ஒரு பத்திரிகை போட்டோ நிருபர் படம் பிடித்தார். பாண்டியன் ஆரஞ்சு ரஸத்தை வாய்க்கருகே கொண்டு போனார். புகைப்படக் கருவி 'கிளிக்' என்றது. பானம் வாய்க்குள் போயிற்று. மறுபடியும் 'கிளிக்' சப்தம் கேட்டது. நிருபர்கள் அவரைச் சூழ்ந்து கொண்டு அவர் உண்ணாவிரதம் இருந்ததற்கான காரணத்தை விசாரித்தார்கள். பாண்டியன் எதுவும் சொல்ல மறுத்து விட்டார்.

சில வாரங்களுக்குப் பிறகு அவரது மற்றொரு பக்கமுள்ள மனையில் மாளிகை கட்டிய பரந்தாமன் புதுமனை புகுவிழா நடத்தத் தடபுடலான ஏற்பாடுகள் செய்திருந்தார். விழாவுக்கு முதல் நாள் இரவே பாண்டியனின் மனம் படாதபாடு பட்டது. மறுநாள் காலை பரந்தாமன் வீட்டில் மேளம் வாசிக்க ஆரம்பித்த அதே சமயத்தில் பாண்டியன் தமது வீட்டு வாசலில் ஒரு கட்டிலில் அமர்ந்திருந்தார். உண்ணாவிரதம் ஆரம்பித்திருப்பதாக அவர் மனைவி தெரிவித்தாள்.

அந்தப் பரந்தாமன் திடீரென்று லட்சாதிபதியான ஒரு வியாபாரி. அவர் ஜனங்கள் உயிர் வாழ்வதற்கு அத்தியாவசியமான சாமான்களைப் பதுக்கிக் கொள்ளை லாபத்துக்கு விற்பவர் என்று பெயரெடுத்தவர். முக்கியமாகக் குழந்தைகளுக்குத் தேவையான பால்மா பட்டிகளை லட்சக்கணக்கில் பதுக்கி வைத்து அதிக விலைக்கு விற்பவர் என்று புரளி ஏற்பட்டிருந்தது.

பாண்டியன் உண்ணாவிரதம் இருக்கிறார் என்று ஜனங்களுக்கு இப்போது தெரிந்து விட்டது; பதுக்கல் முறையை ஆட்சேபித்துத்தான். அவர் உண்ணாவிரத விஷயம் முதல் விரதத்தைவிடப் பிரசித்தமாகி விட்டது. இம்முறை அவர் இருபது நாளல்ல, முப்பது நாளல்ல, சாகும் வரை உண்ணாவிரதம் இருப்பார் என்று பேசிக் கொண்

டார்கள். ஆனால் அவர் ஆறாவது நாள் தமது விரதத்தை நிறுத்தி விட்டார். வழக்கம் போல் மனைவி தனது கையால் ஆரஞ்சரஸம் கொடுக்க, போட்டோ நிருபர்கள் படம் பிடிக்க, அவர் அதைக் குடித்துத் தமது இரண்டாவது உண்ணாவிரதத்தை இனிது முடித்துக் கொண்டார். ஒரு பத்திரிகை நிருபர் அவரை எவ்வளவோ தாஜா செய்து பார்த்தும் அவர் தாம்உண்ணாவிரதம்மேற்கொண்டதற்கான காரணத்தைத் தெரிவிக்க வில்லை. தாம் தியாகி என்று புகழப்பட விரும்பவில்லை என்று கூறிவிட்டார் பாண்டியன்.

இதற்குப் பிறகு இரண்டு மாதங்களாயின. பாண்டியன் வீட்டுக்கு எதிரில் ஒரு பெரிய கல்யாணத்துக்கான ஏற்பாடுகள் நடந்து வந்தன. கல்யாண தினத்துக்கு முதல் நாள் இரவு மாப்பிள்ளையை ஊர்வலமாக அழைத்து வந்தார்கள். அப்போது பாண்டியன் தமது வீட்டு வாசலில் ஒரு கட்டிலில் கால்களை மடக்கிக் கொண்டு உட்கார்ந்திருந்தார். அவர் மனைவியும், மைத்துனனும் மற்றவர்களும் அவரைப் புடைசூழ்ந்திருந்தார்கள். அவர் இடீரென்று உண்ணாவிரதம் ஆரம்பித்திருப்பதாகவும், காரணம் தெரியவில்லை என்றும் அவர்கள் கூறினார்கள். ஊர்வலத்துக்கு வந்திருந்தவர்கள் பலர் உண்ணாவிரதியை வேடிக்கை பார்ப்பதற்காக வந்து விட்டனர்.

மறு நாள் காலை பாண்டியனைச் சுற்றி ஒரே கூட்டம். கல்யாண வீட்டுக்கு வந்தவர்கள் இவரையும் பார்க்க வந்தார்கள். தெருவோடு சென்ற ஒருவர் 'பாபம்! மற்றவர்கள் செய்த பாபத்திற்காக இவர் உண்ணாவிரதமிருக்கிறார். இந்த அதிகாரி இரண்டு கைகளாலும் லஞ்சம் வாங்குபவர். லஞ்சத்தை ஆட்சேபித்துத்தான் உண்ணாவிரதமிருக்கிறார். அவருக்குப் பொதுமக்கள் ஏதாவது உதவி செய்ய வேண்டும்' என்றார்.

பிறகு செந்தாமரையம்மாளை ஒரு குடம் கொண்டு வரச் சொன்னார். அதன் மீது தமது கைக்குட்டையைக் கட்டி அதன் நடுவில் ஒரு துவாரமிட்டார். பிறகு தமது பணப் பையிலிருந்து ஒரு பத்து நயாபைசாவைத் துவாரத்தின் வழியாகக் குடத்துக்குள் போட்டார். 'டங்' என்று சப்தம் கேட்டது. கூடியிருந்த சிலர் தங்களாலானதை அந்த உண்டியலுக்குள் போட்டார்கள். பாண்டியனின் உண்ணாவிரதம் தொடர்ந்தது.



உண்டியலில் அரை ரூபாய் நாணயம், ஒரு ரூபாய் நோட்டு, ஐந்து ரூபாய் நோட்டு முதலியவை விழுந்து கொண்டே யிருந்தன. ஆறுவது தினமன்று அவர் தமது உண்ணு விரதத்தை வழக்கம் போல் முடித்துக் கொண்டார். அப்போது உண்டியலில் கையை விட்டு, அகப்பட்ட சில்லறைகளை அந்தப் பக்கம் வந்த ஏழைகளுக்குக் கொடுத்தார்.

ஆனால், ஆறுவது நாள் பகலில் அவர் உண்ணுவிரதம் இருப்பதைக் காண வந்து சேர்ந்த பத்திரிகை நிருபர்கள் ஏமாந்துபோய் விட்டார்கள். ஏனென்றால், பாண்டியன் ஒரு நாள் இரவு ஒன்பது மணி சுமாருக்கு உண்ணு விரதம் ஆரம்பித்தாரே, ஐந்தாவது நாள் சரியாக இரவு ஒன்பது மணிக்கே அதை முடித்து விட்டார். அது விஷயத்தில் அவர் கண்டிப்பாக இருந்தார்.

அவர் உண்ணுவிரத 'எக்ஸ்பர்ட்' என்று புகழ் பெற்ருர். சில அரசியல் கட்சிகளின் பெரிய தலைவர்கள் அவரை இரகசியமாகச் சந்தித்துப் பேசினர்கள் என்ற புரளி கிளம்பிற்று. அவர்கள் தங்கள் தங்கள் கட்சிக் கொள்கைகளுக்காக அவர் உண்ணுவிரதம் இருக்க வேண்டுமென்று கோரியதாகவும் அதற்காகப் பெரிய தொகை 'பீஸ்' கொடுக்க முன் வந்ததாகவும் வதந்திகள் பரவின.

மேலும் சில மாதங்களாயின. பாண்டியன் வீட்டுக்கு எதிரில், அரசாங்க அதிகாரியின் பங்களாவுக்குப் பக்கத்தில் ஒரு நாலு மெத்தைக் கட்டடம் கிளம்பியிருந்தது. அதில் ஒரு பெரிய காரியாலயம் ஆரம்பிக்கப்படவிருந்தது. கட்டடத்தின் வெளிப்புறத்தில் கம்பெனியின் பெயர் ஆங்கிலத்திலும், ஹிந்தியிலும் பொறிக்கப்பட்ட பெரிய போர்டுகள் தொங்கிக் கொண்டிருந்தன.

காரியாலயம் ஒரு மந்திரியால் திறக்கப்படவிருக்கும் தினம் வந்தது. அன்று காலை பாண்டியன் தமது வீட்டு வாசலில் ஒரு கட்டிலில் உட்கார்ந்திருந்தார். அவர் உண்ணு விரதம் இருக்கத் தொடங்கியிருந்தார்.

அவரைப் பார்க்கப் பெரிய கூட்டம் கூடி விட்டது. மந்திரி எதிரேயுள்ள கட்டடத்துக்கு வரவிருந்ததால், போலீஸ் கமிஷனரே பாண்டியனிடம் வந்து உண்ணு விரதத்தை நிறுத்தி விடும்படி கேட்டுக் கொண்டார். பயமுறுத்திப் பார்த்தார். பாண்டியன் எதிரேயுள்ள கட்டடத்தைக் கையால் சுட்டிக் காண்பித்தார். தமது ஹிருதயத்தை ஒரு கையால் தொட்டுக் காண்பித்தார். பிறகு வயிற்றைத் தடவி விட்டுக் கொண்டார். அவர் வாய் திறந்து பேசவில்லை. தாம் ஐந்து நாட்கள் மட்டும் விரதமிருக்கப் போவதாக, தமது ஐந்து விரல்களையும் ஒவ்வொன்ருக விட்டுக் காண்பித்தார்.

ஜனங்களுக்கு விஷயம் புரிந்து விட்டது. எதிரேயுள்ள கட்டடத்தில் ஆங்கில எழுத்துக்களும், ஹிந்தி எழுத்துக்களும் பொறிக்கப்பட்ட போர்டு தொங்கிக் கொண்டிருந்ததல்லவா? அதை ஆட்சேபித்துத் தான் பாண்டியன் உண்ணுவிரதம் இருக்கிருர் என்று தெரிந்து கொண்டு விட்டார்கள். தமிழ் எழுத்துக்கள் இல்லை, தாய்மொழியாம் தமிழ் மொழி அலட்சியம் செய்யப்பட்டுவிட்டது, அவமானப்படுத்தப்பட்டு விட்டது என்று அவர் மனமும், வயிறும் புண்ணுகி விட்டது என்று பேசிக் கொண்டார்கள்.

இது சம்பந்தமான போராட்டத்தை மறைமுகமாக நடத்தி வரும் அவருக்கு உதவி செய்ய வேண்டும் என்று சிலர் சொன்ஞர்கள். உடனே செந்தாமரை அம்மாள் தன் ஆருயிர்க் கணவன் அமர்ந்திருந்த கட்டிலின் ஒரு பக்கத்தில் ஒரு பெரிய பீப்பாயைக் கொண்டு வந்து வைத்தாள். இன்னொரு பக்கத்தில் பெரிய டிரங்குப் பெட்டியை வைத்தாள். ஒன்று பணத்துக்கும், இன்னென்று சாமான்களுக்கும். சிலர் தங்கள் கைவிரலிலுள்ள மோதிரங்களையும், கைக் கடிகாரங்களையும் கழற்றிப் போடலாம். சில ஸ்திரீகள் தங்கள் பொன்னுபரணங்களையும், வைரத் தோடுகளையும் கழற்றிப் போடலாமல்லவா?

தினமும் பீப்பாயும், டிரங்குப் பெட்டியும் சிறிது சிறிதாக நிரம்பி வந்தன. தினமும் ஏராளமான கூட்டம். பத்திரிகை நிருபர்கள் வரத் தவறுவதில்லை. டில்லியிலிருந்து 'டைம்' 'வாஷிங்டன் போஸ்ட்' பத்திரிகை நிருபர்கள் கூட வந்திருந்தனர். அகில இந்திய ரேடியோ காரியாலயத்திலிருந்து ஒருவர் அவரைப் பேட்டி காண வந்திருந்தார்.

ஆறுவது தினமன்று வழக்கம் போல் பாண்டியன் 'டக்'கென்று தமது உண்ணு விரதத்தை நிறுத்தி விட்டார். அவர் படம் பத்திரிகைகளின் முதல் பக்கத்தில் வெளியாகியிருந்தது.

இதற்குப் பிறகு ஒரு வருஷ காலம் ஓடி விட்டது. ஆனால் பாண்டியன் மறுபடியும் உண்ணுவிரதமிருக்கவில்லை. அவர் வீடு முன்னும் பின்னும் பாதி கட்டப்படாதிருந்த வீடாயில்லை. அது 'செந்தாமரை இல்லம்' என்ற மாளிகையாக விளங்கிற்று. அது கட்டப்பட்டதைக் கொண்டாட ஏற்பாடு செய்திருந்தார்.

அதில் அவர் கிரகப்பிரவேசமோ, புது மனை புகு விழாவோ நடத்தப் போவதாக அழைப்புக் கடிதத்தில் குறிப்பிடவில்லை. 'ஹௌஸ் வார்மிங்' விழா என்று ஆங்கில வார்த்தைகளை உபயோகித்திருந்தார்.

அந்த விழா நடப்பதற்குச் சில தினங்கள் முன் அவர் மைத்துனன் அவரிடம் வந்தான்.

''பழமொழிகள் எழுதிய அட்டைகளை என்ன செய்கிறது? 'நன்றி மறவேல்.' 'வீட்டுக்கு வீடு வாசற்படி' என்றெல்லாம் இருக்கும் அட்டைகள் உங்களுக்கு உயிராச்சே. அவற்றை எல்லா இடத்திலும் மாட்டி வைக்க வேண்டுமா ?'' என்று கேட்டான்.

''அதில் ஒன்று மட்டும் பத்திரமாயிருக்க வேண்டும். பாக்கியை எறிந்து விடலாம். அதைப் பற்றி நாளைக்குச் சொல்கிறேன்'' என்ருர் பாண்டியன்.

பிறகு அவர் தனியே இருந்தபோது அந்தப் பழமொழி அட்டைகளைப் பார்வை

# தலைவலியிலிருந்து

## நல்ல, நிச்சயமான நிவாரணம்










அனஸின் இவ்வளவு சக்திவாய்ந்ததாக இருப்பதற்குக் காரணம் அது ஒரு டாக்டரின் குறிப்பைப்போன்று மருந்துகளின் சேர்க்கையாகும்—துரிதமாகவும் நிவாரணமளிக்கிறது.

- வலியிலிருந்து துரித நிவாரணம் அளிப்பதற்கென அனஸினில் ஒரு பிரத்தியேகமான முறையில் பொருள்கள் சேர்க்கப் பட்டுள்ளன.
- அனஸின் சாதாரணமாகத் தலைவலிக்குக் காரணமான நரம்புகளின் படபடப்பைப் போக்குகிறது.
- அனஸின் ஜுரதோஷத்திலும் இன்ப்ளுவென்ஸாவிலும் ஏற்படும் ஜுரத்தைத் தணிக்க உதவுகிறது.
- அனஸின் உபயோகிப்பதால் வலியுடன் அடிக்கடி தோன்றும் சோர்வு நீங்கிவிடுகிறது.

*Registered Users:* GEOFFREY MANNERS & CO. LTD.

# அனஸின்

**சிறந்தது ஏனெனில் அது**

**4 வழிகளில்**

**வேலை செய்கிறது**

2 வில்லைகளுக்கு 13 பைசேதான்

விட்டார். அவற்றுள் ஒன்றை எடுத்துத் தமது கண்களில் ஒத்திக் கொண்டார். பிறகு முத்தமிட்டார். அந்த அட்டையில்,

''அசல் வாழ்ந்தால் ஐந்து நாள் பட்டினி!'' என்று எழுதப்பட்டிருந்தது.

அக்கம் பக்கத்து வீட்டுக்காரர்கள், எதிர் வீட்டுக்காரர்கள் தவிடுதத்தங்களில் இறங்கினார்களோ இல்லையோ, அவர்கள் நன்றாக வாழ்வதைப் பார்த்து அவர் மனமும், வயிறும் புண்ணானார் என்பது மட்டும் நிச்சயம்.

ஆகவே, பழமொழிக்கேற்ப ஐந்து நாள் பட்டினி கிடக்க நிச்சயித்தார். அது உண்ணாவிரதமாக மாறிப் போய் அவரைப் பெரிய தியாகியாகச் செய்து விட்டது.

''மடையன்கள்!'' என்று பொதுப்படையாக எல்லாரையும் பற்றி அவர் வாய் முணுமுணுத்தது.

**வ**சந்தன் கதையை முடித்து விட்டான்.

அப்போது இரு வரிசையில் முன்னால் பத்துப் பதினைந்து பேரே நின்று கொண்டிருந்தனர். அன்னை பூமி பல கோடி வருஷ காலம் ஒளித்து வைத்திருந்த அந்த அழுகிப் போன ஜீவஜந்துக்களின் சத்தான மண்ணெண்ணெயின் மனோகர வாசனை கம்மென்று வீசிக் கொண்டிருந்தது.

''நான் ஒரு கதை சொல்கிறேன். பொழுது போக வேண்டுமே?'' என்று மாதங்கி கூறித் தானாகவே ஒரு கதை சொல்ல ஆரம்பித்தாள்.

''ஓர் ஊரில் பீதாம்பரம் என்று ஒரு பெரிய வியாபாரி இருந்தார். நல்ல கொழுத்த பணக்காரர். அவருக்கு நந்தினி என்று ஒரே ஒரு பெண் இருந்தாள். அழகான பெண். பி.காம் பரீட்சை கொடுத்திருந்தாள். அவள் தந்தை அவளுக்குச் சீக்கிரத்திலேயே விவாகம் செய்துவிட விரும்பினார்.

ஒரு நாள் அவளைப் பெண் பார்ப்பதற்காகச் சீதாபதி என்ற வாலிபனும் அவன் பெற்றோர்களும் வந்திருந்தார்கள்.

நந்தினி தன் அறையிலிருந்து தன்னைப் பார்க்க வந்தவர்கள் முன் ஆஜராகக் கிளம்பினாள். அப்போது அவள் தம்பி ஓடி வந்து யாரோ அவளை டெலிபோனில் கூப்பிடுவதாகத் தெரிவித்தான்.

நந்தினி டெலிபோனை எடுத்துக் கேட்டாள். அவள் குழாயைச் சிறிது நேரம் வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தாள். சில நிமிஷங்களாகியும் அவள் வாராததைக் கண்டு அவள் தாயார் வந்து பார்த்தாள்.

அந்தச் சமயத்தில் நந்தினி கீழே மயக்கமாக விழுந்து கிடந்தாள்.

ஃஃஃ

''**க**டையை மூடப் போகிறோம். சட்டென்று வாருங்கள்'' என்று கடைக்காரர் உரக்கச் சொல்லவே, மாதங்கி கதை சொல்வதை நிறுத்திவிட்டு மண்ணெண்ணெய் வாங்கிக் கொள்ளச் சென்றாள்.

## ஜனநாயகவாதி



பிராண்ட்

அவர் பிறந்த மண் அவரை நாட்டை விட்டுத் துரத்தியது. ஆனால் அவர் தம் தாயகத்தை மறக்கவில்லை. இரண்டாவது உலக யுத்தம் ஜெர்மனிக்கு அழிவையும், தோல்வியையும், அரசியல் சூன்யத்தையும் வழங்கிய தருணத்தில் வில்லி பிராண்ட் தமது ஐம்பத்தொரு வருஷ வாழ்வில் தாம் அதுவரையில் கண்டிராத பிரச்னைக்கு முடிவு தேட வேண்டியவரா யிருந்தார்.

தாயகத்தை விட்டு விரைந்தபோது தஞ்சம் அளித்த நார்வே, அவருக்கு உயர்ந்த அரசாங்கப் பதவியைத் தரத் தயாராயிருந்தது. அதை ஏற்பதா? அல்லது தாய்நாடு திரும்புவதா?

''நார்வேயில் ஜனநாயகம் என்றால் என்ன என்று நன்கறிந்த கணக்கற்றவருக்கிடையில் ஒருவராக இருப்பதைக் காட்டிலும் ஜனநாயகம் என்றால் என்னவென்றே அறியாத ஜெர்மானியரிடையில் ஒரே ஜனநாயகவாதியான நான் பணிபுரிவது மேலல்லவா?'' என்று தாம் ஜெர்மனிக்குச் சென்று சேவை புரிய முடிவெடுத்தபோது விளக்கினார் பிராண்ட்.

1930ம் வருஷத்திலிருந்து நாஜிகளின் கொடுங்கோன்மையை எதிர்த்துப் போராடிய பிராண்ட், அழிவடைந்த தமது தாயகம் ஜெர்மனியை நாசத்திலிருந்து நல்லபடியாக உருவாக்க உதவுவது என்று தீர்மானித்து அதில் பெருமளவுக்கு வெற்றியும் கண்டார்.

''பேர்லின், கம்யூனிஸத் தொண்டையில் சிக்கிக்கொண்டுள்ள ஓர் எலும்பு'' என்று நிகிடா குருஷேவ் ஒரு தடவை குறிப்பிட்டார். எட்டு வருஷங்களில் வில்லி பிராண்ட் அந்த எலும்பு நீக்கப்படுவதற்கான வசதியைச் செய்து தரவில்லை. இரும்புத் திரைக்குப் பின்னால் 110 மைல் தொலைவில் உள்ள பேர்லின் நகரம் ஜெர்மனியின் மிகப் பிரும்மாண்டமான கமிட்சம் கொழிக்கும் தொழில் நகரமாகத் திகழ்கிறதே! ஆனால் அதே நேரத்தில் கிழக்குப் பேர்லினோ போர்க்காலத்து அழிவுச் சின்னங்களிலிருந்து இன்னமும் விடுபடவில்லை!

ஜனநாயகவாதி பிராண்ட் இன்று மேற்கு பேர்லின் நகரின் மேயர்; அடுத்து இவரே மேற்கு ஜெர்மனியின் சான்ஸலராக வரக்கூடியவர் என்றும் அறுதியிட்டுக் கூறப்படுகிறது. — பி. ஜீ. கிருஷ்ணய்யா

# சித்திரக் களஞ்சியம்



''ஒய், இந்த ஆளே எங்கேக்காணும் பிடித்தீர்? ஒரு டிக்கட் கொடுக்க ஒன்பது நாள் ஆகிறதே?''

''இதற்கு முன்னும் கைரேகை பார்த்துக் கொண் டிருந்தவன் சார், இவன்!''



''ஐயோ, அப்பா! இடது கால் ஒரேயடியா வலிக்குது டாக்டர்!''

''மிஸ்டர் நடராஜன், பஸ்ஸுக்காகக் காத்திருக்கும் போது இனிமேல் ஒரே காலில் நிற்காமல் ஒரு கால் மாற்றி ஒரு காலால் நிற்க வேண்டும்!''









## ஸொஜ்ஜி. பஜ்ஜி. ஸஜ்ஜி
























"பத்து வருஷமாக நான் மஞ்சள் கலர் ஸ்லாக்கையே போட்டு வருகிறேன். எனக்கு அந்தக் கலர் பிடிக்கும்."

"அட! என்னைப் போல நீங்களும் ஒரே ஒரு சட்டை போடுறே வர்றாரா?"

★

"கப்பல் கம்பெனி ஆரம்பிச்சிருக்கே. கப்பல் கவிழ்ந்தாலும் கன்னத்தில் கை வைக்கக் கூடாது."

"சே.. சே..! கன்னத்தில் கை வைப்பேனா? யார் தலையிலாவது தான் கை வைப்பேன்!"



பிகே






# பின்னியின் D318

## பள்ளிக்கு அணிந்து செல்லவே தயாரானது

பின்னியின் D318 நீடித்து உழைக்கும் துணி, பள்ளிக்கூடச் சீருடைகளுக்கு மிகவும் ஏற்றது. கவர்ச்சியான வண்ணங்களில், பல்வேறு பள்ளிகளின் தேவைக்கு ஏற்பக் கிடைக்கிறது. இதை உங்கள் குழந்தைகள் விரும்பி அணிவார்கள்; இதன் உழைப்பு உங்களுக்குத் திருப்தியளிக்கும்.




உங்களுக்குத் தேவையான பின்னி துணிகளை இந்த அடையாளம் காணும் அனுமதிபெற்ற விற்பனையாளரிடமிருந்து கண்டுகொண்டு விலைக்கு வாங்குங்கள்.

பக்கிங்ஹாம் & கர்னாடிக் கம்பெனி லிமிடெட்,
பின்னி & கம்பெனி லிமிடெட், மதராஸ், ஸ்தாபனத்தின் ஒரு கிளை



# அழையாத விருந்தாளி

மயிலைமூர்த்தி

ஆயிரத்தோராவது தடவையாக ராயப் பேட்டை நெடுஞ்சாலையில் நடந்து கொண்டிருந்தான், அண்ணுசாமி. அன்று காலையில் எழுந்ததும் யார் முகத்தில் விழித்தானோ, காலை, பகல் உணவுக்குப் பதிலாக, அந்த நெடுஞ்சாலையில் ரிக்ஷா ஸ்டாண்டுக்குப் பக்கத்தில் இருந்த அந்தக் கார்ப்பரேஷன் குழாய் தான் கைகொடுத்து உதவியிருந்தது. வேளா வேளைக்கு விடாமல் தண்ணீரை மட்டும் குடித்ததால் அவனுக்கு ஏப்பம் அடிக்கடி வந்தது.

நடந்துகொண்டே அண்ணுசாமி யோசித்தான், படித்தவன் பழங்கணக்குப் பார்ப்பது போல, தெரிந்தோ தெரியாமலோ நிறையத் தவறுகளை யெல்லாம் செய்திருந்தான் அவன்.

ஆத்ம சோதனை செய்து, வாழ்நாளெல்லாம் சிந்தித்து, முடிவு காண முடியாமல் தவித்த ஞானிகள், அறிஞர்கள் முதல் சாதாரண அரச மரத்து ஆண்டி வரை, மனிதனுடைய மனத்தின் அடித்தளத்தில் ஆதி முதல் உருவாகி விடை காண முடியாத அக் கேள்வியை அண்ணுசாமியும் ஒரு முறை தன்னைத் தானே கேட்டுக் கொண்டான்.

''அவன் யார் ?''

''அவன் ஏன் பிறந்தான்?''

''இதுவரை எதை யெல்லாம் சாதித்தான் ?''

இந்தக் கேள்விகளுக்கு எல்லாம் ஒரே விடையைத்தான் கண்டான் அவன்.

அவன் பிறந்ததே முதல் தவறு.

அப்படித்தான் பிறந்தானே, சிறு வயதில் கிடைக்கும் இரண்டொரு ரூபாய்களுக்காகப் பெருமளவில் நேரத்தைச் செலவிட்டு, ஊர்ப் பிள்ளைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கும் போது அவனையும் வந்து அவர்களோடு உட்கார்ந்து அந்த 'ரெண்டு எழுத்தை'



அவனுடைய தகப்பனார் கற்றுக் கொள்ளச் சொன்னபோது, அதைக் கொஞ்சமும் மதிக்காமல் ஊர் சுற்றினானே, அதுதான் அவன் வாழ்க்கையில் செய்த பெரிய தவறு. அன்று ஊர் சுற்ற ஆரம்பித்தவன்தான்; இன்னும் தெருவைச் சுற்றிக் கொண்டிருக்கிறான், ஏன், எதற்கு என்ற காரணமே இல்லாமல்.

அவனுக்கென்று ஒரு வேலையும் தெரியாது. கிடைத்த வேலைகளை யெல்லாம் செய்யவும் முடியாது அவனால். மூட்டை தூக்கிப் பிழைக்க உடம்பில் பலமில்லை. மனத்திலோ தைரியமில்லை. இப்படிப்பட்ட ரகங்களுக்காகவே உள்ள சில 'வேலை'களைத்தான் அவன் செய்து வந்தான்.

எப்போதாவது கிடைக்கும் அந்த வேலைகள் அவனைத் தேடி வருவதற்காக ஒரு குறிப்பிட்ட இடம் வைத்திருந்தான்.

அதே ராயப்பேட்டை நெடுஞ்சாலையில் அமைந்திருந்த அந்த ஆஞ்சநேயர் கோவிலின் வலது பக்கத்தில் வருஷக் கணக்காகப் பூட்டப்பட்டுக் கிடந்த நாயர் கடை, அதை ஒட்டிப் போடப்பட்டிருந்த அந்த ஜாதிக்காய் மரப் பெஞ்சு. எதிரே சாலையின் மறு பக்கத்தில் ரிக்ஷா ஸ்டாண்டின் அருகில் குறிப்பிட்ட நேரங்களில் மட்டும் தண்ணீரைச் சொட்டுச் சொட்டாக வழங்கிக் கொண்டிருக்கும் கார்ப்பரேஷன் குழாய்.

இவைதான் அண்ணாசாமியின் 'அலுவலகத்தின்' அடையாளங்கள். நீர்நிலைகளை ஒட்டி வாழும் பறவை இனத்தைப் போல் அந்தக் கார்ப்பரேஷன் குழாயை மையமாக வைத்துத்தான் தன் அன்றாட அலுவல்களைக் கவனித்து வந்தான் அண்ணாசாமி.

நீண்ட நேரம் நடந்ததால் களைப்படைந்த அண்ணாசாமி தள்ளாடியவாறே தன் 'அலுவலகத்தை' அடைந்தான். தன் மேல் துண்டால் மரப் பெஞ்சியை ஒரு முறை தட்டிவிட்டு அதில் படுக்க ஆயத்தம் செய்தான். அந்தப் பெஞ்சின் அடியில் எப்போதும் அவனுடனேயே தங்கி, அவன் சுக துக்கங்களில் பங்கு கொண்டு வந்த அந்தச் சொறி நாயைக் கூடக் காணோம்.

கண்களை மூடிச் சிந்தனையில் ஆழ்ந்திருந்த அண்ணாசாமியின் முகம் திடீரென்று பளிச்சிட்டது. மெதுவாகக் கண்களைத் திறந்தான் அவன். எதிரே கப்பல் போன்ற ஒரு பெரிய கார். திரும்பும்போது அதன் முன்புறம் இருந்த இரண்டு விளக்குகளும் அள்ளி வீசிய ஒளிதான் அண்ணாசாமியின் முகத்தில் பட்டுத் திரும்பி, பிறகு அந்தப் பிராந்தியத்தையே ஒளிப் பிழம்பாக ஆக்கியிருந்தது. அன்னம் போல் ஆடி அசைந்து அந்தக் கார் ஆஞ்சநேயர் கோயிலில் போய் நின்றது.

தன் பார்வையைக் கோயில் இருந்த திசையில் செலுத்தினான் அண்ணாசாமி. அங்கு ஒரு குறவர் கூட்டமே கூடியிருந்தது. தலையில் சுமந்து வந்த காஸ் லைட்டுகளை ஒவ்வொருவராகக் கீழே இறக்கி, கோவில் வாசலில் வைத்துக் கொண்டிருந்தார்கள் அந்தக் குறவர்கள். அண்ணாசாமியின் மனத்தில் இருந்த சுமையும் தானே இறங்கியது. அவன் மனத்தில் தெம்பு பிறந்தது. கீழே போட்டிருந்த துண்டை நிஜமாகவே உதறித் தோளில் போட்டுக் கொண்டு கோயிலைநோக்கி நடையைக் கட்டினான் அண்ணாசாமி.

கோவிலின் உட் பிராகாரத்தை முழுவதும் ஆக்கிரமித்துப் போடப்பட்டிருந்தது அந்த ஜமுக்காளம். அதன் நடுவே பல பெரிய தாம்பாளங்கள், பிளாஸ்டிக் 'ட்ரே'களில் ஒன்றில் பெரிய ரோஜா மாலை; மற்றொன்றில் பெரிய அட்டைப் பெட்டி, இன்னும் வெற்றிலை பாக்கு, கற்கண்டு, சர்க்கரை, சந்தனப் பேலா, கூடியிருந்த ஆண் பெண், சிறுவர் கூட்டம் — இவையெல்லாம் சேர்ந்து அந்த இடத்தைக் கல்யாணக் கூடமாக ஆக்கிக் கொண்டிருந்தன.

வாசற்படியை ஒட்டிச் சுவர் ஓரமாக நாயனக்கார ரங்கப்பன் தன் சகாக்களோடு சேர்ந்து கொண்டு தான் கற்ற வித்தையை விலையாக்கிக் கொண்டிருந்தான்.

ஊர்வலம் புறப்பட்டது. 'காஸ் லைட்' தூக்கிய குறவர்கள் பக்கத்துக்கு நால்வராகப் பிரிந்து வழி காட்டத் தவில் தங்கப்பன் தன் கைவரிசையைக் காட்டச் சுற்றமும் நட்பும் புடை சூழ, மாப்பிள்ளை ஏறியிருந்த அந்தக் கார் அன்னம் போல் அசைந்தது.

ஊர்வலத்தின் முற்றுப்புள்ளியாக, கடைசி 'காஸ்லைட்'டின் நிழலில் தள்ளாடியவாறு நடந்து கொண்டே யோசித்தான் அண்ணாசாமி. அந்தக் கூட்டத்தில் அவனுக்குத் தெரிந்தவர்கள் யாராவது இருப்பார்களா?

என்னமோ விநோதமாகப் பட்டது! அவனுக்கு. அவ்வளவு பெரிய கல்யாணத்தில் அவனுக்குத் தெரிந்தவர்களா? மனத்துக்குள் சிரித்துக் கொண்டான் அண்ணாசாமி.

இருந்தாலும் ஒரு சபலம். தெரிந்தவர்கள் இருந்தால் கொஞ்சம் நெருக்கம் இருக்குமே என்று. அவன் எண்ணம் வீண் போகவில்லை.

அதோ ஊர்வலத்தின் முன் வரிசையில் வாத்தியக்காரர்களுக்கும், கல்யாண வீட்டாருக்கும் நடுவில் குள்ளமாக, இரட்டை நாடியாக, இடுப்பில் ஜரிகை வேஷ்டி ஒன்றைப் பஞ்சகச்சமாக அணிந்து, மற்றொன்றை யக்ஞோபவீதமாக இடது தோளைச் சுற்றிப் போட்டுக் கொண்டு, கையிலே சந்தனப் பேலாவை ஏந்தி, கம்பீரமாக நடை போட்டுக் கொண்டிருக்கிறாரே, சாமிநாத சாஸ்திரி, அவர் அவனுக்குத் தெரிந்தவர். தெரிந்தவர் என்றால், அவன் அவரை இதற்கு முன் பார்த்திருக்கிறான். அவர் நடத்தி வைக்கும் எவ்வளவோ கல்யாணங்களில் அவனும் கலந்து கொண்டிருக்கிறான். ஆனால் அவருக்கும் அவனுக்கும் ஒரே வித்தியாசம். அவருக்கு நாளுக்கு நாள் மார்க்கெட் பெருகிக் கொண்டிருந்தது; செல்வாக்கு வளர்ந்து வந்தது. கைராசிக்காரர் என்று கூடச் சொல்லிக் கேள்விப் பட்டிருக்கிறான் அண்ணாசாமி. ஆனால் அவனோ உயர வழியில்லாமல் ஒரே நிலையில் நின்றுவிட்டான், அழையாத விருந்தாளி அண்ணாசாமி என்ற பட்டப் பெயரோடு.

சாமிநாத சாஸ்திரி அவனைத் தெரிந்து கொள்வாரோ, மாட்டாரோ? எப்படி இருந்தால் என்ன? அந்தக் கூட்டத்தில் அவனுக்கும் தெரிந்த ஒருவர் இருக்கிறார். அது போதுமல்லவா?

ஊர்வலம் எட்வர்ட் எல்லியட்ஸ் ரோடைத் திரும்பிக் கல்யாண மண்டபத்தை நெருங்கிக் கொண்டிருந்தது. எல்லோருக்கும் முன்னால்

# கூடுதலான நான்கு நன்மைகள்!

## —விசேடமான எமது நிதி இடமாற்றல் திட்டத்தின் கீழ்:

1965 மே 1 முதல் அமல்.

1. ஒரு முறை பணம் செலுத்தி அனுப்புவதற்கு உள்ள உச்ச வரம்பு தற்போது ரூ. 2,500.

2. தவணை டெபாசிட்டுகள், குறுகியகால டெபாசிட்டுகள், டிமாண்டுக் கடன்கள், பாதுகாப்பு டெப்பாசிட்டுகள் போன்ற இதர சொந்தக் கணக்குகளும் இத் திட்டத்தின் கீழ் வரும்.

3. பாங்கின் அலுவலகத்திற்கு நீங்கள் வரவேண்டும் என்பதில்லை. உங்கள் பிரதிநிதி வந்து பணம் செலுத்தலாம்!

4. இரண்டு அக்கவுண்டுகளிடையே நிதிமாற்றல் செய்ய இதன் கீழ் அனுமதியுண்டு; ஆனால் இரு அக்கவுண்டுகளும் ஒரே நபரின் சொந்தக் "கணக்காகவோ, அல்லது ஒரு நபரை இரண்டுக்கும் பொதுவாக உடைய கூட்டுக் கணக்காகவோ இருத்தல் வேண்டும்.

ரூ.1000லிருந்து ரூ.2500க்கு உயர்ந்துவிட்டதா உச்சவரம்பு? தாடேப்பள்ளிக்கூடத்திலுள்ள உங்கள் ஏஜெண்டிடம் சொல்லி என் மனைவியின் காதில் விழாமல் பார்த்துக் கொள்ளுங்கள்!




எனவே, ஸ்டேட் பாங்கில் உங்களுக்கென்றே ஒரு சொந்த அக்கவுண்டு இருக்குமானால், விசேஷ நிதிமாற்றல் திட்டத்தின் கீழ், கிடைக்கும் கூடுதலான நன்மைகளை நீங்கள் நாடெங்குமுள்ள ஸ்டேட் பாங்கின் எந்த அலுவலகத்திலிருந்தும் பெற்றுப் பயனடைய முடியும்.

# ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியா

பாரத நாட்டின் தலைசிறந்த பாங்க்

கல்யாண மண்டபத்தை அடைந்த மாப்பிள்ளையை வர வேற்கத் தயாரானார் அவர்.

தனக்குத் தெரிந்த ஒரே மனிதரான அந்தச் சாமி நாத சாஸ்திரியைப் பிரிய முடியாத நிர்ப்பந்தத்தினால் அண்ணாசாமியும் அவரோடு வேகமாக நடக்க முயன்றான். இரண்டு வேளைப் பட்டினி கிடந்த உடம்பு ஒத்துழைக்கவில்லை. ஆனால் எப்படியோ தள்ளாடி நடந்து கல்யாண மண்டபத் தின் உள்ளே நுழைந்து சாமிநாத சாஸ்திரியின் அருகில் பட்டும் படாததுமாக நின்று கொண்டான் அண்ணாசாமி.

சாஸ்திரி ஒரு முறை அண்ணாசாமியை ஏற இறங்கப் பார்த்தார். முகத்தை உடனே வேறு பக்கமாகத் திருப்பி வேறு யாரையோ பார்க்க ஆரம்பித்தார். அண்ணாசாமியால் அந்த முகத்தில் எவ்வித சலனத்தையும் கவனிக்க முடியவில்லை. அவர் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் அவர் கைக்கு எட்டிய தூரத்தில் அவருடனேயே இன்னும் சிறிது நேரம் இருக்க வேண்டும். அவர்தான் அவனுக்கு, அந்த மண்ட பத்தில் இருக்கத் தகுதியளிக்கும் 'பாஸ்போர்ட்'.

மண்டபத்தின் ஓரமாக இருந்த ஒரு தூணில் சாய்ந்த வாறே அமர்ந்து அங்கு நடந்து கொண்டிருந்த வைபவங் களில் அரை நினைவோடு பங்கெடுத்துக் கொண்டிருந்தான்.

"மாமா! இலை போட்டாகி விட்டது. சாப்பிடப் போங்கோ."

அசரீரி போன்ற வாக்குக் கேட்டுத் திடுக்கிட்டுக் கண் விழித்தான் அண்ணாசாமி. உடனே உள்ளே ஓடவில்லை அவன்.

தன்னைச் சுற்றிலும் ஒரு முறை பார்த்தான். யாரோ ஒரு பையன் யாரையோ அழைத்துக் கொண்டிருந்தான். கண்களை மூடிக் கொண்டான் அண்ணாசாமி. அவன் மனம் கூட்டத்தை எடை போட்டுக் கொண்டிருந்தது. நிச்சயம் இன்னும் இரண்டு பந்திகள் சாப்பிட்ட பிறகுதான் அவன் போக முடியும்.

மண்டபத்தில் இருந்த சலசலப்பு கொஞ்சம் கொஞ்ச மாகக் குறைய ஆரம்பித்தது. சாப்பிட்டு விட்டுத் திரும்பிய வர்கள் கூட்டம் கொஞ்சம் கொஞ்சமாக வெளியேறியது.

மூடியிருந்த கண்களைத் திறந்தான் அண்ணாசாமி. அவன் கணக்குப்படி உள்ளே நான்காவது பந்தி நடக்க வேண்டும்.

மணி பத்தடித்தது. அதற்கு மேல் பசி பொறுக்க முடியாததால் இருப்பிடத்தை விட்டு எழுந்தான். கால்கள் சாப்பாட்டு ஹாலுக்கு அவனை இழுத்துச் சென்றன. அப்பப்பா! எவ்வளவு கூட்டம்!

கண்ணுக்கெட்டிய தூரம் வரை ஆறு வரிசைகளில் இலைகள் போடப்பட்டிருந்தன.

தன்னைச் சுற்றிலும் ஒரு முறை பார்த்துக் கொண்டான் அண்ணாசாமி. அங்கு சாப்பிடுவதற்குக் காத்திருந்தவர்கள் எல்லாம் ஒருவிதத்தில் அவனைப் போன்றவர்கள்தான். மிகவும் நெருங்கிய பந்துக்களாகவோ அல்லது நண்பர்களாகவோ அவர்கள் இருக்க முடியாது. கல்யாண வீட்டாருக்கு வேண் டியவர்களுக்கு வேண்டியவர்களான இரண்டாந்தர நட்போ, உறவோ உள்ளவர்கள்தான் அவர்கள். அவனுக்கும் அந்தக் கல்யாணத்தில் 'உறவு' உண்டு. அந்தக் கல்யாணத்தில் அத்தியாவசியமான மனிதர்களில் ஒருவரான சாமிநாத சாஸ்திரி அவனுக்குத் தெரிந்தவர் என்ற 'உரிமை' எண்ணம் மனத்தில் தெம்பைக் கொடுத்தது. சுவரின் ஓரமாகப் போடப் பட்டிருந்த அந்தப் பந்தியில் முதல் வரிசையில் முதல் இலையில் அமர்ந்தான் அண்ணாசாமி. அருகில் டம்ளரில் வைத்திருந்த தண்ணீரை எடுத்து மடமட வென்று குடித்து விட்டுக் காலி டம்ளரை வைத்தான் உரிமையோடு. தண்ணீருக்கும் அவ னுக்கும் அவ்வளவு நெருக்கமான உறவு!

சமையற்காரர்கள் ஒருவர்பின் ஒருவராக அணிவகுத்துப் பரிமாறிக் கொண்டிருந்தனர். பிரதான சமையற்காரர் கப்புச்சாமி கழுத்தில் மைனர் சங்கிலி மின்ன, எல்லோரையும் விரட்டிக் கொண்டிருந்தார்.

திடீரென்று சாமிநாத சாஸ்திரியின் குரல் கேட்டது.

குரல் வந்த திசையில் பார்வையைச் செலுத்தினான் அண்ணாசாமி. அங்கே, இடது கையை இடுப்பில் ஊன்றிக் கொண்டு, விசிறிக் கொண்டபடியே, அந்த ஹால் முழுவதும் பார்வையை ஓட்டிக் கொண்டிருந்தார் அவர். அருகில் குமார்



## புத்தி

அது ஓர் அழகிய நீரோடை. கொக்கொன்று ஒற்றைக் காலில் நின்று தவம் செய்து கொண் டிருப்பதைப் பார்த்த ஒரு சிறிய மீன், "கொக்கே, கொக்கே! எங்களைக் கொத்தி விழுங்குவதற் காகவே வந்திருக்கும் நீ, ஏன் எங்களை ஏதும் செய் யாமல் பொறுமையாக நின்று கொண்டிருக் கிறாய்?" என்று வினவியது.

"நீங்களோ மிகவும் சிறியவர்கள். உங்களைத் தின்பதால் பல உயிர்களை யல்லவா கொல்ல வேண்டியிருக்கும்? பெரிய மீனாக இருந்தால் ஓர் உயிரைப் பலி கொள்வ தோடு நின்றுவிடலாமல் லவா? பாபமும் குறைவு மல்லவா? அதற்காகத் தான்!" என்று பதில் விடுத்தது கொக்கு.

"ஓகோ, அப்படியா! இறைவன் உனக்குக்கூட அறிவோடு கருணையையும் கொடுத் திருக்கிறானே!" எனச் சொல்லிக் கொண்டே அவ்விடத்தை விட்டு அகன்றோடியது.

கொஞ்ச தூரம் சென்ற அச் சிறிய மீனுக்கு மற் றோர் ஐயம் எழவே, மீண்டும் தெளிவு பெறக் கொக்கிடம் வந்தது. "கொக்கே, கொக்கே, உன் கூற்றுப்படி பெரிய மீன் சிக்காவிட்டால் நீ என்ன செய்வாய்? பசி யால்தானே வாடுவாய்?" என்று கேட்டது.

இந்தக் கேள்வியானது கொக்கின் சிந்தனையைத் தூண்டியது. "நல்ல வேளை. புத்தி கொடுத் தாய்!" என்று தனக்குள் கூறிக்கொண்டே அந்தச் சின்னஞ் சிறு மீனை "லபக்" கென்று கொத்தி யது கொக்கு. —கமலபதி

இருபது வயதுடைய ஒற்றை நாடியான ஒரு பையன் நின்றான். ஒவ்வொரு தலையாகப் பார்த்துக்கொண்டு வந்த சாஸ்திரிகளின் கண்களில், அண்ணாசாமியின் தலை தப்பவில்லை.

ஒரே விநாடிதான். கண்களும் கண்களும் சந்தித்தன. முகத்திலே புன்னகையைக் கட்டாயப்படுத்தி வரவழைத்துக் கொண்டான் அண்ணாசாமி. கைகள் அவனையறியாமல் கூப்பின. அவன் உள்ளே நுழையப் 'பாஸ் போர்ட்' ஆயிற்றே அவர். அந்த நன்றிதான்.

சாமிநாத சாஸ்திரி இதை யெல்லாம் கவனித்ததாகவே தெரியவில்லை. திடீரென்று வெளியேறினார் அவர். அவருடன் வந்த அந்த 'ஒல்லி' மட்டும் நடுக் கூடத்தில் நின்று கொண்டிருந்தான்.

சமையற்காரர்கள் பரிமாறிக் கொண்டிருந்தனர். சாதம் வரவேண்டியதுதான் பாக்கி. வெளியே சென்ற சாமிநாத சாஸ்திரி சற்று நேரத்தில் உள்ளே திரும்பினார். அவரைத் தொடர்ந்து காக்கி உடுப்பு அணிந்த கூர்க்கா ஒருவன் வந்து கொண்டிருந்தான்.

சாஸ்திரி அந்தக் கூர்க்காவின் காதுகளில் ஏதோ சொன்னார்.

அவன் நேராக வில்லிலிருந்து புறப்பட்ட அம்பு போல், அண்ணாசாமி அமர்ந்திருந்த இடத்தின் முன்னால் வந்து நின்றான். கீழே தலை குனிந்திருந்த அண்ணாசாமி, தனக்கு எதிரே, அசையாமல் நின்று கொண்டிருந்த தூண் போன்ற அந்தக் கால்கள், அதன் மீது ஆடிக் கொண்டிருந்த காக்கிக் கால் சட்டை — இவற்றைக் கவனித்து விட்டுத் தலையை மெதுவாகத் தூக்கினான்.

அந்தக் கூர்க்கா அவனையே பார்த்துக் கொண்டிருந்தான். தன்னைச் சுற்றிலும் நூற்றுக்கணக்கான ஜோடிக்கண்கள் உற்று நோக்குவதை உணர்ந்தான் அண்ணாசாமி. அவன் உடல் கூனிக் குறுகியது.

''ஏய், நிம்மள் யார், எங்கே வந்தான்?''

கொச்சைத் தமிழில் கூர்க்கா கேட்ட கேள்வியைப் புரிந்து கொண்ட அண்ணாசாமிக்கு, அந்த நிலையிலும் சிரிப்புத்தான் வந்தது. எல்லோரும் கேட்டு, பதில் சொல்லத் தெரியாத அதே கேள்வியை, பாஷை தெரியாத இந்தக் கூர்க்காகூட கேட்டு விட்டான்.

''ஏய், எந்திருய்யா. சாப்பிட்டதைச் சுத்திக்கிட்டுப் போகலாம்னு பார்க்கிறியா?''

கூர்க்கா அண்ணாசாமியின் தோளைப் பற்றியே விட்டான். அப்படியே அவன் கால்களைப் பிடித்துக் கொண்டான் அண்ணாசாமி. ஆனால் கூர்க்கா அதை யெல்லாம் லட்சியம் செய்யவே இல்லை. கோழிக்குஞ்சைத் தூக்கிச் செல்லும் பருந்து போல, அண்ணாசாமியை அப்படியே தள்ளிப் போனான் அவன்.

வழியில் சாமிநாத சாஸ்திரி, இடுப்பில் ஊன்றிய அதே கையுடன் பார்வையை மேலேயிருந்து கொஞ்சம் கொஞ்சமாகப் பூமிக்குத் தாழ்த்தி வந்து கொண்டிருந்தார்.

அவர் அருகில் நின்று கொண்டிருந்த அந்த ஒல்லி, அண்ணாசாமி விட்டு வந்த அந்தக் காலி இடத்தைப் பூர்த்தி செய்ய ஓடிக் கொண்டிருந்தான்.

''ஓய், சாஸ்திரிகளே! பெரிய மனசு பண்ணும் ஐயா. யாரோ புண்ணியவான் செலவழிக்கக் கலியாணம் பண்றான். என்னைப் போல் எவ்வளவோ பேர் அழையாத விருந்தினராக இந்தக் கூட்டத்தில் இருப்பார்கள். ஐயா. கொஞ்சம் தயவு பண்ணும். காலையிலேயிருந்து ஒரே.......''

இவ்வளவும் சொல்ல நினைத்தான் அண்ணாசாமி. ஆனால் ஒரு வார்த்தைகூட வெளியே வரவில்லை.

ஏற்கனவே பசி மயக்கம். உள்ளம் வேறு உடைந்து விட்டது. அப்படியே வாசலருகில் இருந்த விளக்குக் கம்பத்தில் சாய்ந்தான் அண்ணாசாமி. கண்கள் மூடிக் கொண்டன.

'சொத்' என்ற சப்தம் கேட்டுக் கண் விழித்தான் அண்ணாசாமி. சாப்பிட்ட இலைகளை வெளியே, அவனுக்கு அருகிலேயே கொட்டி விட்டுக் காலிக் கூடையுடன் திரும்பினான் அந்த வேலையாள்.

ஒரே விநாடிதான்.

விளக்கு தூக்கி வந்த குறவர்களும், இரண்டொரு பிச்சைக்காரர்களும், அங்கே, சாப்பிட்டு விட்டு வெளியே போட்டிருந்த அந்த இலைக்காகச் சண்டை போட ஆரம்பித்தனர். சிறிது நேரத்தில் அந்த இடத்தில் வாயில்லா நாலு கால் பிராணிகளுக்கும், வாயுள்ள இரண்டு கால் ஜீவன்களுக்கும் இடையே, அந்த எச்சில் இலைகளுக்காக ஒரு பெரிய உரிமைப் போராட்டமே நடந்து கொண்டிருந்தது.

அண்ணாசாமி தத்துவம் படிக்கவில்லை: அவனும் அன்று காலையிலேயிருந்து பட்டினிதான்: ஆனால் அங்கே உரிமைப் போராட்டம் நடத்திக் கொண்டிருந்த அந்த இனத்தோடு சேர விரும்பவில்லை அவன்.

போராட்டம் ஓய்ந்தது.

வாயுள்ள வலிய ஜீவன்களுக்கு விட்டுக் கொடுத்து, வாயில்லா மெலிய பிராணிகள் பின்வாங்கின.

அவற்றில் ஒரு நாய்!

பெரிய இலை ஒன்றை இழுத்துக் கொண்டு அவன் பக்கம் ஓடி வந்தது அது. அண்ணாசாமியை உற்று நோக்கியது, புது எதிரி முளைத்து விட்டானோ என்ற பயத்தில். திடீரென்று, ஓர் ஆரவாரக் குரல் எழுப்பி, வாலை ஆட்டி அவனைச் சுற்றி வர ஆரம்பித்தது.

நாயை நோக்கினான் அண்ணாசாமி.

அவனுடைய 'அலுவலகத்தின்' தோழனை, கருப்பும் சாம்பல் நிறமும் கூடிய அதே சொறி நாய்தான்.

உரிமையோடு அருகில் வந்து படுத்த அந்த நாயைத் தட்டிக் கொடுத்தான் அண்ணாசாமி:

எதிரே, அது இழுத்து வந்து போட்டிருந்த, பாதிக்கு மேல் மீந்திருந்த சாப்பாட்டோடு கூடிய அந்த இலை, நிவேதனப் பொருளாகக் காட்சியளித்துக் கொண்டிருந்தது.

போராட்டத்தின் வெற்றிப் பரிசான அந்த எச்சில் இலையை—எஜமானனோ அல்லது நண்பனோ — தன்னுடன் பழகிய மற்றொரு ஜீவனுக்கு, விட்டுக் கொடுக்கத் தயாராக இருந்தது அந்த நாய்.

எங்கோ பிறந்து, எங்கோ வளர்ந்து, அவனிடம் வந்து சேர்ந்த ஐந்து அறிவு படைத்த ஒரு விலங்கினம்! அதனிடம் நன்றி உணர்ச்சி, பரிவு, அன்பு எல்லாம் இருந்தன.

கண்களில் துளித்த நீரை விரலால் கண்டி எறிந்தான் அண்ணாசாமி. சாமிநாத சாஸ்திரியின் உருவம் அவன் மனக் கண் முன்னால் தோன்றியது.

சாமிநாத சாஸ்திரி அவனுக்குத் தெரியாதவராகவே இருந்திருக்கலாம்!



# மங்களம் ஜோடி

அக்ஷயம்

சம்பந்தம் – மங்களம் ஜோடியைப் பார்த்து, 'இணை–துணையென்றால் இப்படியல்லவோ இருக்க வேண்டும்!' என்று ஊரெல்லாம் பேசிக் கொண்டது. காரணம், சம்பந்தம் சுத்தக் கருமி. எச்சிற் கையால் காக்காய் ஓட்ட மாட்டான். அவனுக்குச் சகதர்மிணியாக வாய்த்த மங்களமோ அவனுக்கும் ஒரு படி மேலே போய் விட்டாள். அவள் ஈரக் கையாலேகூடக் காக்காய் ஓட்ட மாட்டாள்.

அன்று சம்பந்தத்துக்கு ஒரு பெருத்த சோதனை ஏற்பட்டு விட்டது. அவன் பகலுணவை முடித்துக் கொண்டு அன்றைய தினத் தாளை எடுத்துக்கொண்ட பொழுது கண்ணைச் சுற்றிக்கொண்டு வந்தது தூக்கம். அரைத் தூக்கத்தில் அவன் நண்பன் விடாக்கண்டன் வெங்குசாமி வந்து சேர்ந்தான். ''டேய், பழி! பகல் வேளையில் என்னடா தூக்கம்?' என்று கேட்டுக்கொண்டே, வந்ததும் வராததுமாக ''டேய், சம்பந்தம்! என்றைக்கும் நீ கருமி என்றே பெயர் வாங்கியிருக்கிறாய். இன்றைக்காகிலும் தருமி என்று பெயர் வாங்கக் கூடாதா? ஒரு நல்ல காரியத்துக்காக நான் உன்னிடம் பொருளுதவி நாடி வந்திருக்கிறேனடா! இல்லையென்று தட்டிச் சொல்லாமல் தந்து தொலையடா!'' என்றான்.

யாருக்குமே தன் குணத்தை நேருக்கு நேர் ஒருவர் குத்திக் காட்டினால் ரோஷம் பிறக்கத்தானே செய்யும்? சம்பந்தத்துக்குக் கோபம் வந்து விட்டது! ''டேய், அளக்காதேடா! நீ எந்த நல்ல காரியத்துக்கு வந்திருக்கிறாய்? நான் இல்லையென்று சொல்லியிருக்கிறேன்! கருமி, தருமி என்று என்னவெல்லாமோ வாயில் வந்தபடி பேசிக் கொண்டே போகிறாயே!'' என்று கடிந்தான்.

''அப்படியானால் நான் வந்த காரியம் பழம்தான் என்று சொல்லு. உன் மனசுகூட மாறி விட்டதே! இனி மழைதான், போ!'' வெங்குசாமி பெருமிதத்துடன், தான் வந்த காரியத்தைச் சொல்லிக்கொண்டே போனான்: ''நான் மேற்கொண்டுள்ள இந்த நற்பணிக்கு எல்லோரும் தங்களால் இயன்ற பொருளுதவி செய்வதாக வாக்களித்துள்ளார்கள். உன் விகிதத்துக்கு, ஓர் ஐந்து ரூபாயாவது.......''

''ஐந்தென்ன, பத்தே தருகிறேன்! நல்ல காரியம் எதற்கும் பொருளுதவி செய்ய இந்தச் சம்பந்தம் தயங்க மாட்டான்; பின் வாங்க மாட்டான். தெரிந்து கொள்!''

சம்பந்தமா இப்படிப் பேசுகிறான்? வெங்குசாமி வியப்புக் கடலில் விழுந்து எழுந்து ஒரு நோட்டுப் புத்தகத்தை நீட்டி, ''இதில் உன் கையாலேயே பெயரையும் தொகையையும் எழுது!'' என்றான்.

''இதோ பார், வெங்கு! எனக்குப் பெயரும் வேண்டாம், புகழும் வேண்டாம். இதோ ரூபாயையே தந்து விடுகிறேன். சற்று இரு. அவளிடம் போய் பீரோ சாவி வாங்கி வருகிறேன்!'' என்று கூறிக் கையிலிருந்த பத்திரிகையை மேஜை மேல் விட்டெறிந்து விட்டு 'மங்களம்' என்று குரல் கொடுத்தான். ''இந்த வெங்குசாமிக்கு ஒரு பத்து ரூபாய் எடுத்துக்கொடு. ஏதோ நல்ல காரியத்துக்காகக் கேட்கிறான்!'' என்றான்.

சம்பந்தம் பேச்சை முடிக்கக்கூட இல்லை. மங்களம் சீறினாள்: ''யாரைக் கேட்டுக் கொண்டு கொடுக்கிறீர்கள்?''

சம்பந்தம் விழித்தான்; தன் தவறை உணர்ந்தான். என்ன காரியம் செய்யவிருந்தோம், எப்படி மயிரிழையில் தப்பினோம் என்ற பெருமித உணர்வு தாண்டவமாட அறை வாசலை நோக்கினான். மங்களம் கையில் வெற்றிலைத் தட்டுடன் உண்மையாகவே உள்ளே நுழைந்து கொண்டிருந்தாள்.

''மங்களம்! ஓர் அசட்டுக் காரியம் செய்யவிருந்தேன். அறிவுக் கூர்மையான காரியம் ஒன்று ஏற்கனவே செய்திருந்ததால் தப்பினேன். சாவிக் கொத்து உன் கையில் இருந்ததோ, பத்து ரூபாய்ப் பணம் பிழைத்ததோ?'' என்றான் சம்பந்தம், பணம் பிழைத்த மகிழ்ச்சியில்.

''என்ன?'' — மங்களத்தின் வாயிலிருந்து அதிகாரக் குரல் எழுந்தது. ''என்னைக் கேட்காமல் பணம் தருவதாகக் கூற எப்படித் துணிந்தீர்கள்?''

''இல்லையடி! சாப்பிட்டு விட்டு இங்கு வந்து உட்கார்ந்தேனா? இந்த வெங்குசாமி வந்து துளைத்தெடுத்தான், ஏதோ ஒரு நல்ல காரியத்துக்குத் தர வேண்டுமென்று! நிஜ வாழ்க்கையில்தான் நாம் சிக்கனமாக இருக்கிறோமே, கனவு வாழ்க்கையிலாவது சிறிது தாராளமாக இருப்பதாகக் காட்டிக் கொள்வோமே என்று சொல்லி வைத்தேன். அப்புறம்தான் என் தவறு எனக்குப் புரிந்தது. விழித்துக் கொண்டேன். நல்ல வேளையாக இது பகற் கனவு. பலிக்கவா போகிறது?'' என்று அவளைச் சமாதானப்படுத்த முயன்றான்.

''அது பகற்கனவாகட்டும், அல்லது இராக் கனவாகவேதான் இருக்கட்டும். என் அனுமதியில்லாமல் கனவிலும் கொடுக்கலாமா?' உங்களுக்கு எப்படி அந்தத் துணிச்சல் வந்தது? இருக்கட்டும், சொல்லுகிறேன், உங்களுக்கு!'' என்று கறுவினாள் மங்களம். அவள் இடுப்பில் தொங்கிக் கொண்டிருந்த சாவிக் கொத்தும் அவளோடு ஒத்துப் பாடியது.

Printed & Published by R Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon